| | |
|---|---|
| தன்னாரியன்பால் | தனக்கு தாரகனை ஆசாரியன்பக்கல் |
| அன்பொழியில் | ப்ரேமம் குலைந்தால் |
| அன்றும் | நிக்ரஹத்தைப்பண்ணா நிற்கும். (௩௫) |

## ௩௬-பா-வில்லார்.

| | |
|---|---|
| வில்லார் | தேஜஸ்ஸு மிக்கிருந்துள்ள |
| மணி | ரத்நங்களை |
| கொழிக்கும் | குவித்தெறடா நிற்கும் |
| வேங்கடம் | திருவேங்கடமென்கிற |
| பொற்குன்றமுதல் | ஸ்ப்ருஹணீயமான திருமலைதொடக்கமாயுள்ள, |
| செல்லார் | மேகங்கள்வந்துபடியும்படியிருக்கும் |
| பொழில் | பொழில்களாலே |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| திருப்பதிகளெல்லாம் | உகந்தருளின திவ்யதேசங்களெல்லாம், |
| மருளாமிருள் | அஜ்ஞாநமாகிற அந்தகாரமானது |
| ஓட | அதிஶீக்ரமாகப்போம்படியாக |
| மத்தகத்து | ஶிஷ்யனானவன் சிரஸ்ஸிலே |
| தன்தாள் | தம்முடைய திருவடிகளை |
| அருளாலே | நிர்ஹேதுகக்ருபையாலே |
| வைத்த | வைத்தருளின |
| அவர் | ஆசார்யரான அவரேயாவர். (௩௬) |

## ௩௭-பா-பொருளும்

| | |
|---|---|
| பொருளும் | தனக்குண்டான தநமும் |
| உயிரும் | தன்ப்ராணனும் |
| உடம்பும் | தன்ஶரீரமும் |
| புகலும் | தன்க்ருஹமும் |
| தெருளும் | தன்ஜ்ஞாநமும் |
| குணமும் | தன்னுடையஶமதமாதிகுணங்களும் |
| செயலும் | தன்வ்யாபாரங்களும், ஆகிய இவையெல்லாவற்றையும் |

| | |
|---|---|
| அருள் புரிந்த | நிர்ஹேதுகக்ருபைபண்ணித்தன்னை யங்கீகரித்தருளின |
| தன்னாரியன்பொருட்டா | தன் ஆசார்யனுக்குச் சேஷமாக |
| சங்கற்பம் செய்பவர் | ஸங்கல்பித்திருக்குமவர்களுடைய |
| நெஞ்சு | ஹ்ருதயமானது |
| எந்நாளும் | எப்போதும் |
| மாலுக்கு | ஸர்வேஸ்வரனுக்கு |
| இடம் | விரும்பிவர்த்திக்கும் இடமாகும்; |

## கஅ-பா-தேனார்

| | |
|---|---|
| தேனார் | மதுஸம்ருத்திமாருத |
| கமலம் | செவ்வித்தாமரைப்பூவை வாஸஸ்தாநமாகவுடைய |
| திருமாமகள் | பெரியபிராட்டியாருக்கு |
| கொழுநன் | வல்லபனான ஸர்வேஸ்வரன், |
| தானே | ஸர்வாதிகனான தானே |
| குருவாகி | மநுஷ்யரூபங்கொண்டு ஆசார்யனாகி, |
| தன்னருளால் | தன்னுடையக்ருபையாலே, |
| மானிடர்க்காய் | உபதேசத்தால் திருந்துவதற்குயோக்யரானமநுஷ்யர்களுக்காக |
| இந்நிலத்தே | அவர்களிருந்த இந்தபூமியிலே |
| தோன்றுதலால் | அவதரிக்கையால், |
| யார்க்கும் | எல்லாசேதநர்க்கும் |
| அவன் தாளிணையை | ஶேஷியான அந்தவாசார்யன் திருவடிகளை |
| உன்னுவதே | ப்ராப்யமாக அநுஸந்திக்குமதுவே |
| சாலஉறும் | மிகவும் ஸ்வரூபத்துக்குச்சேரும்; |

## க௯-பா-அலகை

| | |
|---|---|
| அலகைமுலை | பெற்றதாய்போல்வந்தபேயின் முலையை |

| | |
|---|---|
| சுவைத்தார்க்கு | அவன்ப்ராணனோடே புஜித்துத்தன்னை நோக்கித் தந்தவன்பக்கல் |
| அன்பரடிக்கு | ப்ரேமயுக்தரானவர்களுடைய திருவடிகளில் |
| அன்பர் | ப்ரேமயுக்தராய், |
| திலதமென | லோகத்துக்குத் திலகபூதரென்று ஶ்லாகிக்கும்படி |
| திரிவார்தம்மை | ஸஞ்சரிக்கும் மஹாத்மாக்களை |
| உலகர் | லௌகிகரானவர்கள் |
| பழிதூற்றில் | பகவத்விஷயத்திலும், வர்ணாஶ்ரமாதி விபாக(ஞா)மறபாகவதவிஷயத்தில் அதிப்ராவண்ய முடையவரென்பதே ஹேதுவாக நிந்திக்கில், |
| துதியாகும் | அது இவர்கள்குண ப்ரகாசகமாகையால், ஸ்துதியாகும். |
| அவர் | அந்த லௌகிகர் |
| தூற்றுது | அப்படிநிந்தியாமல், |
| இவரை | இந்தபாகவதப்ராவண்யமுடையவர்களை |
| போற்றில் | நல்லவரென்றுபுகழில் |
| அது | அந்தபுகழ்கை |
| புன்மையேயாம் | நிந்தையேயாய்விடும். (௩௯) |

## ௪௦-பா-அல்லிமலர்

| | |
|---|---|
| அல்லிமலர்ப்பாவைக்கு | பெரியபிராட்டியார்விஷயத்தில் |
| அன்பர் | ப்ரேமயக்தனுயிருக்கும் ஸர்வேஶ்வரனுடைய |
| அடிக்கன்பர் | திருவடிகளில் ப்ரேமயுக்தராயிருக்குமவர்கள் |

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ப்ரமேயஸாரம் பதவுரை.

## க-பா-அவ்வானவர்க்கு

| | |
|---|---|
| அவ்வானவர்க்கு | அகாரவாச்யனான ஸர்வேஶ்வரனுக்கு |
| மவ்வானவரெல்லாம் | மகாரவாச்யரான ஜீவாத்மாக்களெல்லாரும் |
| அடிமையென்று | ஶேஷபூதர்களென்று |
| உவ்வானவர் | கடகத்வமே ஸ்வரூபமாயுள்ள ஆசார்யரானவர்கள் |
| உரைத்தார் | அருளிச்செய்தார்கள்; |
| இவ்வாறு | இந்தப்ரகாரத்தை |
| கேட்டு | உபதேஶ முகத்தாலே கேட்டு |
| இருப்பார்க்கு | அதிலே நிலைநின்றிருக்குமவர்களுக்கு |
| ஆளென்று | ஶேஷபூதர்களென்று |
| கண்டிருப்பார் | தங்களை தர்ஶித்திருக்கு மவர்கள், |
| மீட்சியில்லா | புநராவ்ருத்தியில்லாத |
| நாடு | திருநாட்டிலே போய் |
| இருப்பாரென்று | அடியார் குழாங்களுடன் கூடியிருக்குமவர்களென்று, |
| நான் | எம்பெருமானார் திருவடிகளிலே ஸேவித்திருந்தநான் |
| இருப்பன் | ப்ரதிபத்திபண்ணியிருப்பன். (க) |

## உ-பாட்டு-குலமொன்று.

| | |
|---|---|
| குலம் | ஆத்மாவுக்கு நிருபாதிகமாயிருக்கும் ஶேஷத்வரூபமானகுலம் |
| ஒன்று | ஒன்றேயுள்ளது. |
| உயிர் | அந்தஶேஷத்வாஶ்ரயமான ஆத்மாக்கள் |

| | |
|---|---|
| பல | அஸங்க்யாதர் ; |
| தம்குற்றத்தால் | தாங்கள்பண்ணின புண்யபாபரூபகர் மமடியாக |
| இட்ட | ஈஸ்வரன் இவர்களுக்குக்கொடுத்த |
| கலம் | ஶரீரமாகிறபாத்ரம் |
| ஒன்று | ஒன்றேயாகும். (தேவாதிபேதத்தால் ஶரீரங்களநேகமானாலும் எல்லாம் ப்ருக்ருதிபரிணமமாகையால் அத்தையிட்டு ஒன்றென்று சொல்லப்பட்டது) |
| காரியமும் | அந்தந்த தேஹபரிக்ரஹத்தாலுண்டாகும் புண்ய பாபபலாநுபவரூபமான ஸுகதுக்காதிகளாகிற காரியமும் |
| வேறும் | பலவகைப் பட்டிருக்கும். (இப்படி ஸம்ஸாரம் இடைவிடாமல் நடக்கைக்கடி சொல்லுகிறார்மேல்) |
| பலமொன்று | க்யதிலாபபூஜாதிகளாகிற பலமொன்றிலும் |
| காணாமை | காணவையாதே |
| காணும் கருத்தார் | இவ்வாத்மாவினுஜ்ஜீவநத்திலேயேநோக்கான நினைவையுடைய ஆசார்யனது |
| திருத்தாள்கள் | திருவடிகளை |
| பேணாமைகாணும். | ஆஶ்ரயியாமை காணுங்கோள்; |
| பிழை | இப்படி ஸம்ஸாரம் அவிச்சிந்நமாய்ச் செல்லுகைக்கடியான குற்றம் (உ) |

## ௩-பாட்டு-பாலங் கொண்டு.

| | |
|---|---|
| பலங்கொண்டு | ஐஶ்வர்யாதிகளிலேதேனுமொருபலத்தைக்கொண்டல்லது |
| மீளாத | (உபதேசாதிகளால் திருத்தினாலும்) மீளாமல் பற்றிநிற்கும் படியான |

## ௬-பாட்டு-உள்ளபடி.

| | |
|---|---|
| உள்ளபடி | ஸ்வஸ்வரூபத்தை உள்ளபடி |
| உணரில் | தர்ஶித்தால் |
| ஒன்று | பேற்றுக்கு உடலாவதொன்று |
| நமக்கு | அகிஞ்சநரானநமக்கு |
| உண்டென்று | உளதென்று |
| விள்ள | பிரியநிற்க, |
| விரகிலதாய்விட்டதே | வழியற்று விட்டதன்றோ?; |
| கொள்ள | நம்பக்கல் கொள்ளவேண்டும்படியான |
| குறையேதுமில்லாற்கு | குறை ஒன்றுமில்லாத ஸர்வேஶ்வரனுக்கு, |
| இறையேது மில்லாத | அவனுக்குச் சேஷமான ஆத்மாத்மீயங்களில் ஏகதேசமுமில்லாத |
| யாம் | ஶேஷபூதரானநாம் |
| கூறுவதென் | (நம்மை ரக்ஷிக்கைக்குடலாக) அவனைக்குறித்துச் சொல்லுவதென்?; |
| சொல்லீர் | சொல்லுங்கோளென்று ஸம்ஹிதரைப்பார்த்துச் சொல்லுகிறார். (௬) |

## ௭-பாட்டு-இல்லையிருவர்க்கு.

| | |
|---|---|
| இருவர்க்கும் | ஶேஷஶேஷிகளிருவர்க்கும் |
| இல்லையென்று | ஓரில்லாமை உண்டென்று, (இவ்வநுஸந்தாநத்தாலே) |
| இறையை | ஶேஷியானவனை |
| வென்றிருப்பாரில்லை | ஜயித்திருப்பா ரொருவருமில்லை, |
| அஃது | அவ்வநுஸந்தாநம் |
| ஒருவர்க்கு | ஒருவருக்கு |
| எட்டுமதோ | எய்துமோ. |
| குறைதான் | அவனுக்கு இத்தலையில் கொள்ள வேண்டும் குறைதான் |
| இல்லை | இல்லை; |
| உடைமைதான் | இவனுக்கு அத்தலைக்குஸமர்ப்பிக்கத் தக்க உடைமைதான் |

| | |
|---|---|
| இல்லை | இல்லை, |
| என்று | என்று, |
| கூறினரில்லா | அபௌருஷேயமான |
| மறையுடையமார்க்கத்தே | வேதமார்க்கத்தில் |
| காண் | கண்டுகொள். (எ) |

## அ-பாட்டு-வித்தமிழவு

| | |
|---|---|
| வித்தம் | தநத்தினுடைய |
| இழவு | விநாஶமும், |
| இன்பம் | ஸுகமும் |
| துன்பம் | து:க்கமும் |
| நோய் | ரோகாதிகளும் |
| வீகாலம் | ஶரீரவிநாஶகாலமும், ஆகிய இவையெல்லாவற்றையும் |
| தத்தமவையே | தந்தாமுக்கடியான அந்தக்கர்மங்கள் |
| தலையளிக்கும் | பலதசையிலேகொடுக்கும்; [தானே |
| அத்தை | அதில் |
| விடர் | மநஸ்ஸுவைக்கவேண்டா. |
| இச்சியான் | ப்ரயோஜநாந்தரங்களிலொன்றையுமிச்சியாதவன், |
| இச்சியாது | மோக்ஷாதிரூபமான வொருப்ரயோஜநத்தையு மிச்சியாமல் |
| ஏத்த | வாய்படைத்த ப்ரயோஜநம்பெறும்படி ஸர்வேஶ்வரனை ஸ்துதிக்க, |
| எழில்வானத்து | விலக்ஷணமான பரமபதத்தில் |
| உச்சியான் | உயர்ந்தநிலத்திலே யெழுந்தருளியிருக்கும் ஸர்வேஶ்வரனுக்கு |
| உச்சியானும் | ஶிரஸாவஹிக்கத்தக்கவனாவான். (அ) |

## கூ-பாட்டு-தத்தமிறையின்

| | |
|---|---|
| தாளிணையைவைத்த | அஜ்ஞாநாந்தகாரம்போம்படி தம் திருவடிகளை வைத்தருளின |
| அவரை | ஆசார்யனை |
| தம்தம்இறையின் | நமக்கு ஸ்வாமி, நமக்கு ஸ்வாமியென்றுமுறைசொல்லத்தக்க ஸர்வேஶ் |

| | |
|---|---|
| வடிவென்று | திவ்யவிக்ரஹமென்று |
| வணங்கியிரா | க்ரமத்திலே அநுவர்த்தித்திராதே |
| பித்தராய் | ப்ராந்தராய், |
| நிந்திப்பார்க்கு | மாநுஷப்ரதிபத்திபண்ணி நிந்திப்பவர்களுக்கு |
| ஏறு | ஒருகாலும் கரையேற்றமின்றிக்கேயிருப்பதாய் |
| நீள் | நெடுகச்செல்லாநிற்கும் |
| நிரயம் | ஸம்ஸாரமாகிற நரகம்தான் |
| உண்டு | உண்டு. (௯) |
| நீதியால் | முறைதப்பாமல் |
| வந்திப்பார்க்கு | அநுவர்த்தித்திருக்குமவர்களுக்கு |
| இழியா | புநராவ்ருத்தியில்லாத |
| வான் | பரமபதமானது |
| உண்டு | உண்டு. |

## ௧௦-பா-இறையும்.

| | |
|---|---|
| இறையும் | அகாரவாச்யனான ஈஸ்வரனையும், |
| உயிரும் | மகாரவாச்யனான ஆத்மாவையும், |
| இருவர்க்குமுள்ள | இவ்விருவர்க்குமுண்டான |
| முறையும் | சதுர்த்தியால் சொல்லப்பட்ட ஶேஷ ஶேஷிபாவஸம்பந்தத்தையும், |
| முறையேமொழியும் | க்ரமமாகப்ரதிபாதிக்கிற |
| மறையும் | வேதரூபமான திருமந்த்ரத்தையும் |
| உணர்த்துவாரில்லாநாள் | யதாவத்தாக அறிவிப்பாரில்லாதகாலத்திலே |
| ஒன்றல்ல | (அவையெல்லாம்) ஒருவஸ்துவாகாமல், அஸத்கல்பமாய்க்கிடந்தன; |
| உணர்த்துவாருண்டானபோது | (இவையெல்லாம்) அறிவிப்பாருண்டானபோது |
| ஆன | உளவாயிற்றன. (௧௦ |

ப்ரமேயஸாரம் பதவுரை முற்றிற்று.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:,

பரமகாருணிகரான விளாஞ்சோலைப்பிள்ளை

திருவாய்மலர்ந்தருளிய

# ஸப்தகாதை.

———:0:———

இதற்கு

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

பிள்ளை லோகம் ஜீயரருளிச்செய்த

வ்யாக்யாநமும் பதவுரையும்.

---

ஸபாபண்டிதரான,

ஸ்ரீமான் புதுப்பட்டு

திருவேங்கடாசாரியரால்,

நன்றாகப் பரிசோதிக்கப்பட்டு

---

ஸ்ரீ வைஷ்ணவக்ரந்த முத்ராபக ஸபையாரால்

பராங்குச திருவவதாராதி ருதகஅ-வது ஸம்வத்ஸரமான

நள ஸம்வத்ஸரத்தில்,

காஞ்சீபுரம்

யுனைட்டெட் அச்சுக்கூடத்தில்

அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்பட்டது.

---

விஜயதேதராம்

1916.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

## இச்சபையில் தமிழ்லிபியில் அச்சிட்ட க்ரந்தங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம், ப்ரதிபத தாத்பர்ய ஸஹிதம் | | | 1 | 10 | 0 |
| பாரதாதி தனிஸ்லோகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ராமசரமஸ்லோகம் | ,, | ,, | 0 | 1 | 0 |
| துஷ்கரஸ்லோக டிப்பணி | ,, | ,, | 0 | 2 | 6 |
| யதிதர்மஸமுச்சயம் | ,, | ,, | 0 | 9 | 0 |
| முதல் திருவந்தாதி | ,, | அரும்பதப்ரதிபத ஸஹிதம் | 0 | 9 | 0 |
| இரண்டாம் திருவந்தாதி | ,, | ,, | 0 | 6 | 6 |
| மூன்றாம் திருவந்தாதி | ,, | ,, | 0 | 6 | 0 |
| நான்முகன் திருவந்தாதி | ,, | ,, | 0 | 7 | 0 |
| திருவிருத்தம் அரும்பதப்ரதிபத தாத்பர்யஸஹிதம் | | | 1 | 14 | 0 |
| திருவாசிரியம் | ,, | ,, | 0 | 3 | 0 |
| பெரியதிருவந்தாதி | ,, | ப்ரதிபதஸஹிதம் | 0 | 7 | 0 |
| திருவெழுகூற்றிருக்கை | ,, | ,, | 0 | 3 | 0 |
| சிறியதிருமடல் பெரியதிருமடல் | | ,, | 0 | 8 | 0 |
| திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் | | ,, | 1 | 5 | 0 |
| திருப்பல்லாண்டு | ,, | ,, | 0 | 8 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி உரையுடன் | | ,, | 0 | 8 | 0 |
| பராசரவிசிஷ்ட பரமதர்ம ஸாஸ்த்ரம் தாத்பர்ய ஸஹிதம் | | | 0 | 7 | 0 |
| ஷண்மததர்ஶிநி | | | 0 | 1 | 0 |
| பெரியதிருமொழி ௧ முதல் ௧௧ பத்துக்கள் (8 புஸ்தகம்) | | | 8 | 0 | 0 |
| பெரியாழ்வார் திருமொழி ஸவ்யாக்யாநம் (2 புஸ்தகம்) | | | 5 | 6 | 6 |
| திருச்சந்த விருத்தம் ஸவ்யாக்யாநம் | | | 1 | 6 | 0 |
| திருமாலை ஸவ்யாக்யாநம் | | | 0 | 14 | 0 |
| திருப்பள்ளியெழுச்சி | ,, | ,, | 0 | 6 | 0 |
| அமலனாதிபிரான் | ,, | ,, | 0 | 7 | 0 |
| திருவாய்மொழி நூற்றந்தாதி | ,, | ,, | 1 | 0 | 0 |
| உபதேசரத்தினமாலை | ,, | ,, | 1 | 0 | 0 |
| ஞானஸாரம் ப்ரமேயஸாரம் ஸவ்யாக்யாநம் | | | 0 | 8 | 0 |
| ஸப்தகாதை ஸவ்யாக்யாநம் | | | 0 | 4 | 0 |

இப்படிக்கு,

ம. திருவேங்கட முடையான்,

கார்யதர்சி அதிகாரி,

நெ. ௬௧, வெங்கடாசல முதலி வீதி, சென்னை.




விளாஞ்சோலைப்பிள்ளை அருளிச்செய்த

ஸப்தகாதை

# தனியன்.

வாழி நலந்திகழு நாரணதாதனருள்
வாழி யவனமுதவாய்மொழிகள்—வாழியே
ஏறு திருவுடையா னெந்தையுலகாரியன்சொல்
தேறு திருவுடையான்சீர்.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த வ்யாக்யாநம்.

## அவதாரிகை.

* உலகங்கட்கெல்லாமோருயிரான திருவரங்கச்செல்வனாருக்குங்கூட (க) "𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍-ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்கிற திருமுகப்படியே மிகவும் தா(த)ரகராய்க்கொண்டு, அனைவருமுஜ்ஜீவிக்கும்படி அத்திகிரியருளாளரனுமதிமுன்னாக ப்ரபந்தீகரித்தருளின ஸ்ரீவசநபூஷண ப்ரமுகநிகிலரஹஸ்யக்ரந்தமுகேந சரமப்ரமாணப்ரமேய ப்ரமாத்ருவைபவங்களை ஸப்ரகாரமாகவும் ப்ரகாசிப்பித்தருளின பிள்ளைலோகாசார்யருடைய திருவடிகளிலே ஆஸ்ரயித்து,

அவதாரவிசேஷமான அவருடைய விசேஷகடாக்ஷத்தாலே * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலையான திருவாய்மொழியையும், அதுக்கு அங்கோபாங்கங்களான * இருந்தமிழ்நூற்புலவர்பனுவல்களையும், மற்றெண்மர் * நன்மாலைகளையும், பிள்ளான் முதலானோர்செய்தருளும் தத்தத்வ்யாக்யாநங்களையும், அவற்றின் தாத்பர்யார்த்தங்களுக்கும் ஸப்தரஸ

(க) கீதை-எ-கஅ.

அர்த்தரஸ பாவரஸங்களுக்கும் ஸ்வாபதேஸாதிகளுக்கும் நேர் ப்ரகாஸகங்களானவிஸேஷார்த்தங்களையும், ஸார்த்தமாகஸம் ஸயவிபர்யயமற அடைவேயதி(ஃ) கரிக்கப்பெற்று க்ருதார்த்த ராய்,

உடையவருக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸரைப்போல வும், நம்பிள்ளைக்கு ஏறுதிருவுடையான்தாஸரைப்போலவும், நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர்க்குப் பிள்ளைவானமாமலைதாஸ ரைப்போலவும், பிள்ளைலோகாசார்யருக்கு ஆத்மஸமராயும் ப்ராணஸமராயும், த்ருஷ்டிஸமராயும், பாஹுஸமராயும், ஆப ரணஸமராயும், பாதஸமராயும், பாதரேகாஸமராயும், பாதச் சாயாஸமராயும், பாதுகாஸமராயும், பாதோபதா(ஃ)நஸமராயு மெழுந்தருளியிருக்குமவராய்,

ப்ரம்ஸஸம்பாவனையில்லாத உத்க்ருஷ்டஜந்மத்திலே அவ தரிக்கப்பெறுகையாலேஸஹஜதாஸ்யத்தையுடையராய், "தீதற் றஞானத் திருவாய்மொழிப்பிள்ளை" என்னும்படி ஸமஸ்தஸா ஸ்த்ரபாரங்கதராயும்ஸர்வஜ்ஞராயும் பெருமதிப்பராயும் போரு கிற திருவாய்மொழிப்பிள்ளையுங்கூடத் தம்மருகேசென்று சர மார்த்தவிஸேஷங்களைக் கேட்டுப்போரும்படி மிகவும் ஸர்வ ஜ்ஞராய், "வாழிநலந்திகழு நாரணதாதன்" என்று யாகாநு யாகோத்தரவீதிகளில் காயாந்நஸ்தலஸூத்திபண்ணின ஸூ த்தவ்ருத்தா(ஃ)சாரமறியும் பெரியோர்களாலேஸர்வகாலமும் போற்றப்படுமவராய்,

ஸ்வாசார்யரான பிள்ளைலோகாசார்யர் தம்முடைய சரம தசையிலே "ஸரீராவஸாநகாலத்தளவும் நீர்திருவநந்தபுரத்தே யிரும்" என்று நியமித்தருளுகையாலே அவர் நியமித்தருளின படியே அங்கேசென்று, (க)"நடமினோநமர்களுள்ளீர்" என்கிற ஆழ்வாருடைய நியமநத்திலே அந்தர்ப்பூதரானவர்களில் தாம் ப்ரதாநரென்னும்வாசிதோற்ற * படமுடையரவில் பள்ளி பயின்றவன் பாதம்பணிந்து த்வாரத்ரயத்தாலும்முகநாபிபாதங் களை- முகமாகவும் ஸநாபியாகவும், அடிப்பாடாகவும்அடைவே யநுபவித்து, வாசமேகமழும்சோலையான புறச்சோலைக்குள் ளே விவிக்தமாயிருப்பதொரு ப்ரதேஸவிசேஷத்திலே சென்று,

---

(க) தி-வாய்-௧0-உ-அ.

“గురుపాదామ్బుజం ధ్యాయేత్ - குருபாதாம்புஜம் த்யாயேத்” என்றும், “విగ్రహాలోకనపరః - விக்ரஹாலோகநபர:” என்றும், “శ్రీశైలేశార్యముఖారవిన్ద మఖిలప్రత్యర్థిగోషం సతాం తాం గోష్ఠీఞ్చ తదేకలీన మనసా సఞ్చిన్తయన్తం సదా- ஸ்ரீஶைலேஶார்ய முகாரவிந்தமகிலப்ரத்யர்த்தகோஷம்ஸதாம் தாம்கோஷ்டீஞ்சததேகலீநமநஸாஸஞ்சிந்தயந்தம்ஸதா” என்றும் சொல்லுகிறபடியே திருவடிச் செங்கமலத்திருத்தாள்களும், திகழும் வான்பட்டாடை பதிந்த திருமருங்கும், முப்புரிநூலின் தாமமணிவடமமர்ந்த திருமார்பும், முன்னவர்தந்தருள் மொழிகள் நிறைந்ததிருமுறுவலும், கருணைபொழிந்திடுமிணைக் கண்களும், கனநல்லசிகைமுடியும், திங்கள்போலும் திரிநுதலும், திருக்கண்ணும் செவ்வாயும், பொங்கொளிசேர் பொன்மொழியும் புரிநூலும் பொற்சீருளும் மங்கலமானமலர்மார்பும் மணிவடமும், மருங்குதனில் பரியட்டமும் கமலப்பதயுகமும், அழகியபத்மாஸநமும், ஈராறுதிருநாமமணிந்த வெழிலும், இனிதிருப்போடெழில் ஞானமுத்திரையும் தாமுமாகவெழுந்தருளியிருக்கிற பிள்ளைலோகாசார்யருடைய திவ்யமங்களவிக்ரஹத்தைப் பாதாதி கேசாந்தமாகவும், கேசாதி பாதாந்தமாகவும் உருவுவெளிப்பாட்டாலே விஶத விஶததர விஶததமமாக த்யாநித்துக்கொண்டு.

“వార్తోఞ్ఛవృత్త్యాపి యదీయగోష్ఠ్యాం గోష్ఠ్యన్తరాణాం ప్రథమాభవన్తి- வார்த்தோஞ்சவ்ருத்த்யாபி யதீயகோஷ்ட்யாம் கோஷ்ட்யந்தராணாம் ப்ரதமாபவந்தி” என்கிற வேறுபாட்டையுடைத்தாயிருந்துள்ள நம்பிள்ளை திருவோலக்கத்துக்குப் போலியான அவருடைய திருவோலக்கவாழ்வை (௧) “భావోనాన్యత్రగచ్ఛతి- பாவோநாந்யத்ரகச்சதி” என்னும்படி அஸ்தமிதாந்ய(பா)பாவராய்த்யாநித்துக்கொண்டு, தம்திருமேனியில் சிலந்திநூலிழைக்கும்படியாகவும் (௨) “నైవదంశాన్- நைவதம்ஶாந்” இத்யாதிப்படியே கடித்ததும் ஊர்ந்ததும் தெரியாதபடியாகவும் நாலாறுநாள் ஸமாதி(தி)யிலே யெழுந்தருளியிருக்குமவராய்,

(௧) ரா-உத்த-௪௦-௧௫. (௨) ரா-அ-௬-௯-௭௨.

"வாழி ஏறுதிருவுடையா னெந்தையுலகாரியன்சொல் தேறுதிருவுடையான் சீர்' என்கிறபடியேஸ்வாசார்யரானபிள்ளை லோகாசார்யருடைய திவ்யஸூக்திகளாயிருந்துள்ள ஸ்ரீவசந பூஷணாத்ய கிலரஹஸ்யதாத்பர்ய ஸாரதமார்த்த விசேஷங்களை யே ஸர்வகாலமும் அநுபவித்துக்கொண்டு போருமவராய், "பாருலகைப் பொன்னுலகாப் பார்க்கவும் பெற்றோம்" என்று தாமேபேசும்படி ஸம்ஸாரபரமபதவிபாக(ஞா)மறஇரண்டையு ம்ஒருபோகியாக்கிக்கொண்டுபோருகிறவிளாஞ்சோலைப்பிள்ளை,

வகுளபூஷண சாஸ்த்ரஸாரமாய் சரமரஹஸ்யமாயிருந்து ள்ளஸ்ரீவசநபூஷணதிவ்யசாஸ்த்ரத்திலே பரக்கச்சொன்ன விசேஷங்களை யெல்லாம் தம்முடையபரம க்ருபையாலே அனை வர்க்கும் ஸுக்ரஹமாம்படி ஸங்க்ரஹித்தருளுவதாகத் திருவுள் ளம்பற்றி, ஸ்ரீகீதைக்குச் சரமச்லோகம் ப்ரதாநமாயிருக்கிறாப் போலே,சரமப்ரமாண ப்ரமேயப்ரமாதாக்களைச் சரமமாகப்ரதி பாதிக்கிற சரமப்ரகரணம்ஸ்ரீவசநபூஷணத்துக்காகப்ரதாநமாயி ருக்கையாலே, இதில்ப்ரதிபாதிக்கிற அர்த்தவிசேஷங்களையும் மற்றைப்ரகரணங்களில் ததுபயோகிதயா பரக்கப்ரதிபாதிக்கிற அர்த்தவிசேஷங்களையும் பரப்பற ஏழுபாட்டாலே ஸங்க்ரஹி த்து "வாழியவனமுதவாய் மொழிகள்" என்னும்படி ஸர்வோ பபோ(ஞா)க்ய மாயிருந்துள்ள "ஸப்தகாதை" என்கிறப்ரபந்த முகத்தாலே அருளிச்செய்கிறார்.

அதெங்ஙனேயென்னில்; "வேதார்த்த மறுதியிடுவது" என்றுதுடங்கி "ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவனுக்காக" என்னுமளவாக புருஷகாரப்ரகரணத்தில் சொல்லுகிற அர்த்தவிசேஷங்களை,(க)"[Telugu-script Sanskrit]-அஹந்தாப்ரஹ்மணஸ் தஸ்ய" இத்யாதிந்யாயத்தாலே "அம்பொனரங்கர்க்கும்" என்கிறவிடத்தில் தாத்பர்யவிதியாக ஸூசிப்பிக்கையாலும், "ப்ரபத்திக்கு "என்றுதுடங்கி "[Telugu-script Sanskrit]-ஏகாந்தீவ்ய பதேஷ்டவ்ய:" என்னுமளவாக உபாயப்ரகரணத்தில் சொல்லு கிறவர்த்த விசேஷங்களை "உம்பர்திவமென்னும் வாழ்வுக்குச் சேர்ந்தநெறி" என்கிறவிடத்தில் ஸூசிப்பிக்கையாலும், "உபா

(க) [illegible]

யத்துக்கு” என்று தொடங்கி “உபேயவிரோதிகளுமாயிருக்கும்” என்னுமளவாக அதிகாரிநிஷ்டாக்ரமப்ரகரணத்தில்சொல்லுகிற வர்த்தவிசேஷங்களை “அஞ்சுபொருளும், பார்த்த குருவினளவில், தன்னையிறையை” இத்யாதிகளாலே ஸங்க்ஷேபிக்கையாலும்,

“தான்ஹிதோபதேசம் பண்ணும்போது” என்று தொடங்கி “உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்” என்னுமளவான ஆசார்யாநுவர்த்தநப்ரகரணத்தில் சொல்லுகிற அர்த்தவிசேஷங்களை “என்பக்க லோதினர்” இத்யாதியால் ஸங்க்ஷேபிக்கையாலும், “ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது” என்று தொடங்கி “நிவர்த்தகஜ்ஞாநம் அபயஹேது” என்னுமளவாக பகவந்நிர்ஹேதுகக்ருபா ப்ரபாவப்ரகரணத்தில் சொல்லுகிற அர்த்தவிசேஷங்களை “அழுக்கென்றிவையறிந்தேன்” என்கிறபாட்டிலேஸங்க்ஷேபிக்கையாலும், “ஸ்வதந்த்ரனை உபாயமாகத்தான்பற்றினபோதிறேஇப்ரஸங்கந்தானுள்ளது” என்று தொடங்கி, “அநந்தரம்பலபர்யந்தமாக்கும்” என்னுமளவான சரமப்ரகரணத்திற் சொல்லுகிற அர்த்தவிசேஷங்களை முதற்பாட்டுத்தொடங்கி “தீங்கேதுமில்லா” என்னுமளவாக ஸங்க்ரஹித்து, அடைவே அபி(ஃ)தாநவ்ருத்தியாலும், அந்வயமுகத்தாலும், வ்யதிரேகமுகத்தாலுமாக ப்ரகாசிப்பித்தருளுகையாலும், இப்ப்ரபந்தம் பரமரஹஸ்யமான ஸ்ரீவசந பூஷணார்த்தங்களுக்கு ஸங்க்ரஹமாமென்னக் குறையில்லையிறே.

ப்ரதமபர்வத்தை “செக்கர்மாமுகில்” என்றுதொடங்கி நம்மாழ்வார் திருவாசிரியத்தில் ஏழுபாட்டாலே ப்ரகாசிப்பித்தருளினப்போலே இவரும் சரமபர்வத்தை “அம்பொனரங்கர்க்கும்” என்று தொடங்கி இப்ப்ரபந்தந்தன்னில் ஏழுபாட்டாலே ப்ரகாசிப்பித்தருளுகிறார்.

இன்னும் அதிலுமிதுக்கு நெடுவாசியுண்டு; அதெங்ஙனேயென்னில்;-பாதப்ராஸாதி நியதியில்லாத ஆசிரியப்பாவாய்க் கொண்டுநடந்து (க)“సంసారబన్ధస్థితి మోక్ష హేతుః- ஸம்ஸாரபந்தஸ்திதிமோக்ஷஹேதுः” என்றும், (உ)“సిద్ధిర్భవతి వా నేతి సంశయోఽచ్యుత సేవి

(க) ஸ்வே-அ-கக. (உ)

நாம் - ஸித்திர்பவதிவாநேதி ஸம்ஶயோச்யுதஸேவிநாம்” (க) “அந்நாள் நீதந்தவாக்கை” (உ) “மங்கவொட்டுன்மாமாயை” என்றும் சொல்லுகிறபடியே பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவானப்ரதமபர்வத்தை ப்ரதிபாதிக்கும் அது;

பாதப்ராஸாதிநியதியுடைத்தான வெண்பாவாய்க்கொண்டு நடந்து (ங) “తమసః పారం దర్శయతి ఆచార్యస్తు తే గతిం వక్తా - தமஸ꞉பாரம் தர்ஶயதி - ஆசார்யஸ்துதேகதிம்வக்தா” என்றும், “నసంశయోఽస్తి తద్భక్త పరిచర్యారతాత్మనామ్ - நஸம்ஶயோஸ்திதத்பக்தபரிசர்யாரதாத்மநாம்” என்றும், (ச) “நீதியால்வந்திப்பார்க்குண்டிழியாவான்” என்றும் சொல்லுகிறபடியே மோக்ஷைகஹேதுவான சரமபர்வதத்தைச் சதிராகப்ரதிபாதிக்கிறது.

அன்றிக்கே, ஆண்டாளுடைய திவ்யஸூக்தி ப்ரமாணகமாய், த்ரயோதஶ வாக்யாத்மகமாயிருந்துள்ள வாக்யகுருபரம்பரையிலே துரீயவாக்ய ஸங்க்ரஹமாய், ஸப்தாக்ஷரியானப்ரதமவாக்யத்தில் ப்ரதமாக்ஷரத்தை “அம்பொனரக்கர்க்கும்” என்றுதொடங்கி முதலடியில், மூன்றாமுள்ளம் முதல்பாட்டும், த்விதீயாக்ஷரத்தை “அஞ்சுபொருளுமளித்தவன்” என்கிறவிடத்தில் இரண்டாம்பாட்டும், த்ருதீயாக்ஷரத்தை “பார்த்தகுரு” என்கிறவிடத்தில் நேராக மூன்றும்பாட்டும், துரீயாக்ஷரத்தை “ஒருமந்திரத்தின்” என்கிறவிடத்தில் நாலாம்பாட்டும், பஞ்சமாக்ஷரத்தை “என்பக்கலோதினர்” என்கிறபாட்டில் அஞ்சாம்பாட்டும், ஷஷ்டாக்ஷரத்தை “அம்பொனரங்கர்” என்கிறவிடத்தில் நேரே ஆறும்பாட்டும், சரமாக்ஷரத்தை “சேருவரேயந்தாமந்தான்” என்கிறவிடத்தில் சரமதயமாக ஏழாம்பாட்டும் அடைவே உட்கொண்டு நடந்த ஶ்ரீராமாயணம் இருபத்துநாலாயிரமாய் அவதரித்தவோபாதி இப்ப்ரபந்தமும் ஏழுபாட்டாயவதரித்ததென்னவுமாம்.

ஶ்ரீமதுரகவிகளும் வடுகநம்பியும் சரமபர்வத்தை உக்த்யநுஷ்டானங்களாலே அடைவேவ்யக்தமாக்கினாப்போலேகாணும் இவரும் இப்புடைகளிலே சரமபர்வத்தை உக்த்யநுஷ்டானங்களாலே வ்யக்தமாக்கினபடி. *

---

(க) தி-வாய்-ங-உ-க. (உ) தி-வாய்-௧௦-எ-௧௦ (ங) சாந்தோ-ச-௧௬.
(ச) ஞானஸாரம்.

மூ;—அம்பொனரங்கர்க்கு மாயிக்குமந்தரங்க
சம்பந்தங்காட்டித் தடைகாட்டி—உம்பர்
திவமென்னும் வாழ்வுக்குச்சேர்ந்த நெறிகாட்டு
மவனன்றோவாசாரியன். (க)

---

அவ;—முதற்பாட்டு.(க)"ప్రాప్యస్య బ్రహ్మణో రూపం ప్రాప్తుశ్చ ప్రత్యగాత్మనః। ప్రాప్త్యుపాయం ఫలం ప్రాప్తేస్తథా ప్రాప్తివిరోధి చ। వదన్తి సకలా వేదాస్సేతిహాసపురాణకాః। మునయశ్చ మహాత్మానో వేదవేదాన్తపారగాః - ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம் ப்ராப்துஶ்சப்ரத்யகாத்மநः| ப்ராப்த்யுபாயம்பலம் ப்ராப்தேஸ்ததா ப்ராப்திவிரோதிச|வதந்திஸகலா வேதாஸ்ஸேதிஹாஸபுராணகாः| முநயஶ்சமஹாத்மானோ வேதவேதாந்தபாரகாः" என்கிறபடியே தத்வவிதேக ப்ரமாணமான வேதாந்தவாக்யங்களாலும், தத்ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தில் பதத்ரயத்தாலும்,தத்தர்த்தநிஷ்டரான வாழ்வார்கள் பாசுரத்தாலும், அவஶ்யம் ஜ்ஞாதவ்யதயா அறுதியிடப்பட்ட அர்த்தபஞ்சகத்தை நேராக வுபதேசித்தருளுமவனே ஸதாசார்யனாகிறானென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார்.

வ்யா ;—(அம்பொனரஙகர்க்கு மித்யாதி) "ஸம்ஸாரிகள் தங்களையுமீஶ்வரனையும் மறந்து" இத்யாதியாலே அர்த்தபஞ்சகத்தை உபதேசித்தருளுமவனே ஆசார்யனென்று பிள்ளையருளிச்செய்தாரிறே. இவரும் அத்தையிட்டறிவித்து "காட்டுமவனன்றோ வாசாரியன்" என்கிறார்; பிள்ளையை யடியொத்துமவர் இவரொருவருமேபோலேகாணும். * பேசிற்றே பேசும் ஏககண்டராயிருக்கு மிருப்புள்ளது நம்முதலிகளுக்கேயிறே.

(உ) "ఉక్తార్థవిశదీకారయుక్తార్థాన్తరబోధనమ్। మతం వివరణం తత్ర- உக்தார்த்த விஶதீகாரயுக்தார்த்தாந்தர போதநம் | மதம்விவரணம்தத்ர" என்கிறபடியே திருமந்த்ரத்தில் ப்ரதமபதமாய் அஸம்ஹிதாகாரேண பதத்ரயாத்மகமாயிருந்துள்ள ப்ரணவத்தாலே ப்ரதிபாதிக்கப்படுகிற அர்த்தங்களுக்கு உபயுக்தங்களாயும், தத்ப்ரதிபந்நங்களாயுமிருக்கிற அர்த்தவிசேஷங்களுக்கு நேரேப்ரகாசகமாய்க்கொண்டு பதத்வயாத்மகமான மந்த்ரசே

---

(க) வ்ருத்தஹாரீத-அ. (உ)

ஷம் ப்ரணவத்துக்கு விவரணமாயிருக்கிறபடியைத் திருவுள்ளம் பற்றி, முந்துறமுன்னம் (௧) "𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌲𑍀𑌨𑌸𑍍𑌯 𑌯𑌃 𑌪𑌰𑌸𑍍𑌸 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃-தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ" என்றும், (௨) "𑌅𑌕𑌾𑌰𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌵𑌾𑌚𑌕𑌃 - அகாரோவிஷ்ணுவாசகஃ" என்றும், (௩) "துளக்கமில்விளக்கமாய்" என்றும் "𑌅𑌵-𑌰𑌕𑍍𑌷𑌣𑍇-அவ-ரக்ஷணே" என்றும் சொல்லுகிறபடியே ஶ்ரியஃபதியான ஸர்வேஶ்வரனையும் அவனுடைய ரக்ஷகத்வ ஶேஷித்வங்களையும் ஶாப்தமாகப்ரதிபாதிக்கிற ஸவிபக்திகமான அகாரத்தினுடையவும், அதிலே அநுக்தங்களாய் ரக்ஷ்யோபயோகிகளான கல்யாணகுணங்களை ஶாப்தமாகச் சொல்லுகையாலே தத்விவரணமான நாராயண பதத்தினுடைய வுமர்த்தத்தை உட்கொண்டருளிச் செய்கிறார்.

(அம்பொனரங்கர்க்கும்) அழகியதாயும்பாவநமாயுமிருந்துள்ள திருவரங்கப்பெருநகரத்தை, (௪) 'தென்திருவரங்கம் கோயில் கொண்டானே" என்கிறபடியே தமக்கிருப்பிடமாகவுடையராய், ஸர்வரக்ஷகராய், ஸர்வஶேஷியாய் அஶரண்ய ஶரண்யத்வாதிகல்யாண ணகணபூஷிதரான பெரியபெருமாளுக்கும், ஶ்ரீமதுரையை-(௫)"𑌸𑍁𑌧𑌾-ஸுதா" எனறும், "𑌪𑌾𑌪𑌹𑌰𑌾 - பாபஹரா" என்றும் சொன்னவோபாதி, கோயிலையும் தென்னரங்கமென்றும் பொன்னரங்கமென்றும் சொல்லுகையாலே இதுதானே போக்யமாயும் பாவநமாயுமிறே யிருப்பது. போக்யதைக்கடி (௬) "தெழிப்புடைய காவிரிவந்தடி தொழும்-சீரரங்கம்" என்றும், (௭) "தேன்தொடுத்தமலர்ச்சோலைத்திருவரங்கம்" என்றும், (௮) "இனிதாகத்திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கம்" என்றும் சொல்லுகிற நீர்வாய்ப்பும் நிழல்வாய்ப்பும் நிலவாய்ப்புமாகிறவிவை;

பாவநத்வத்துக்கடி (௯) "திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கம்" என்றும், (௧0) "செழுமணிகள் விட்டெறிக்கும் திருவரங்கம்" என்றும் சொல்லுகிற அஜ்ஞாநாந்தகார நிரோதித்வமும்

(௧) தை-நா. (௨) (௩) தி-௪-வி ௪.
(௪) தி-வாய்-௭-௨-௯. (௫) (௬) பெரி-தி-௫-௮-௭
(௭) பெரி-தி-௫-௮-௪. (௮) பெரி-தி-௫-௯-௧0.
(௯) பெரி-தி-௫-௯-௬. (௧0) பெரி-தி-௫-௯-௭.

ஸ்வப்ரகாஶகத்வமுமாகிறவிவை. பெரியபெருமாளுக்குள்ள உபயலிங்கத்வம் இதுக்குமுண்டுபோலேகாணும்; தம்மைப் பற்றியிருப்பார்க்குத் தம்படியைக்கொடுக்குமவரிறே அவர் தான்.

"அம்பொனரங்கர்க்கும்" என்று அவரை ஒருவிஶேஷவஸ்துவையிட்டாகாதே நிரூபிக்கவேண்டுவது:(க) "திருமாலடியார்கள்" என்று அத்தலையாலே இத்தலைக்கு நிரூபணமானாப்போலேகாணும் இத்தலையாலே அத்தலைக்கு நிரூபணமிருக்கிறபடி. (உ) "ராமாநுஜலக்ஷ்மணபூர்வஜஞ்ச-ராமாநுஜஃலக்ஷ்மணபூர்வஜஞ்ச" என்றதிறே. (அம்பொனரங்கர்க்கு) (ந) "என்னரங்கத்தின்னமுதர் குழலழகர்வாயழகர்" என்றும், (ச) "அரங்கமேயவந்தணனை" என்றும் சொல்லுகிறபடியே அழகுமபாவநத்வமும் பெரியபெருமாளுக்கே யாகவுமாம்.

இத்தால்—ஸமஸ்தகல்யாண குணாத்மகத்வமும், அகிலஹேயப்ரத்யநீகத்வமுமாகிற உபயலிங்கத்வமும சொல்லுகிறது. இவ்வுபயலிங்கத்வம் பரத்வோத்தம்ப(க)கமாகையாலேஇத்தையே இவர்க்குநிரூபகமாகச்சொல்லுகிறார். (டு) "அஹந்த்ரஹ்மண ஸ்ய ஸாஹமஸ்மி ஸநாதநீ- அஹந்தாப்ரஹ்மணஸ்தஸ்யஸாஹமஸ்மிஸநாதநீ" என்றும்(சு)"இவளோடுகூடியே வஸ்துவினுடைய வுண்மை" என்றும் சொல்லுகிறபடியே "அரங்கர்க்கு"என்கிறவிடத்தில் பிராட்டியும் பகவத்ஸ்வரூபாந்தர்ப்பூதையாய்க்கொண்டு தோற்றுகையாலே, புருஷகாரப்ரகரணத்தில், "புருஷகாரமாம் போது க்ருபையும், பாரதந்த்ர்யமும், அநந்யார்ஹத்வமும் வேணும்." இத்யாதியாலே சொல்லுகிற புருஷகாரவைபவமும் "அம் பொன்" என்கிற விஶேஷணத்வயத்தாலே ஸூசிப்பித்தருளுகிறாரென்று கண்டுகொள்வது.

அன்றிக்கே, "அம்பொன்" என்று அழகாலே வந்தஸ்ப்ருஹணீயதையைச் சொல்லுகிறதாகவுமாம். ஸ்ப்ருஹணீயதை (எ) "காமதம்காமகம்காம்யம்விமாநம்ரங்கஸம்ஜ்ஞகம் - காமதம்காமகம்

(க) தி-வாய்-டு-சு-கக. (உ) ரா-ஸு-உஅ-௩௦. (உ) கா-தி-கக-உ. (ச) திருவெ.கச. (டு) லக்ஷ்மீதந்-உ. (சு) முமுக்ஷுப்படி. (எ)

காம்யம் விமாநம்ரங்கஸம்ஜ்ஞிகம்" என்கையாலே கோயிலுக்கும் (௧)"సఖ్యంసమస్తజనచేతసిసన్ధానమ్ - ஸக்யம்ஸமஸ்தஜந சேதஸிஸந்ததாநம்" என்கையாலே பெரியபெருமாளுக்குமுண்டிறே. (௨)"రతింగతో యతస్తస్మాద్రంగమిత్యుచ్యతేబుధైః - ரதிங்கதோயதஸ்தஸ்மாத் ரங்கமித்யுச்யதேபுதை:" என்கிறபடியே பெரியபெருமாளுக்கு நிரதிஶயாநந்த வர்த்த(ர்த)கமாயிருக்கையாலே கோயிலை அரங்கமென்கிறது.

(அம்பொனரங்கர்க்கும்) (௩)"போயிந்திரலோகமாளும்" என்கிறபடியே, அர்ச்சிராதிமார்க்கத்தாலே சென்று விரஜையிலே குடைந்து நீராடி அமாநவகரஸ்பர்ஶம் முன்னாக அப்ராக்ருததேஹத்தைப் பரிக்ரஹித்துப் புகுரவேண்டியிருக்கும் பொன்னுலகுபோலேயும், ஸம்ஸாரவர்த்த(ர்த)கமாயிருக்கும் கொடுவுலகம்போலேயுமிருக்கை யன்றிக்கே, இச்சரீரத்தோடேதானே புகுரலாயும் ஸம்ஸாரநிவர்த்தகமாயு மிருக்கையாலே "அரங்கமாநகர்" என்னும்படி விபூதித்வயத்துக்கும் புறம்பாய், அதனவத்ருதீய விபூதியாயிருந்துள்ள திருவரங்கம் திருப்பதியிலே (௪)"அடியவரை யாட்கொள்வானமருமூர்" என்கிறபடியே இங்குள்ளாரை யடிமைகொள்வதாக அவதாரங்கள்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே ஸ்தாவரப்ரதிஷ்டை யாய்க்கொண்டு அமர்ந்துஎழுந்தருளியிருக்கிற பெரியபெருமாளுக்கும்,

(௫)"முகில்வண்ணனடிமேற்சொன்ன சொல்மாலையாயிரம்" என்றும், "(௬)மதிளரங்கர்வண்புகழ்மேல்ஆன்றதமிழ்மறைகளாயிரமும்" என்றும், (௭)"శఠకోపవాగ్వపుషిరంగగృహేశయితమ్-ஶடகோபவாக்வபுஷிரங்கக்ருஹேஶயிதம்" என்றும் சொல்லுகிறபடியே இவர்தாம், (௮)"ప్రమాణంశఠజిత్సూక్తిః ప్రమేయంరంగచన్ద్రమాః-ப்ரமாணம் ஶடஜித்ஸூக்தி: ப்ரமேயம் ரங்கசந்த்ரமா:" என்னும்படி மேயசரமமாய்க்கொண்டு மாநசரமமான திருவாய்மொழிக்கு நேரே ப்ரதிபாத்யராகையாலும், * பதின்மர்பாடும் பெருமாளாகையாலும், குருபரம்பரைக்கு முதலடியாகையாலும், * மா

(௧) ர-ஸ்த- (௨) ரங்கமாஹாத்ம்யம். (௩) திருமலை-௨.
(௪) பெரி-தி-௪-௧.௩. (௫) தி-வாய்-௭-௨-௧௧. (௬) தி-வாய்-தனியன்.
(௭) ர-ஸ்த- (௮)

மலை மற்றுமாக உகந்தருளின நிலங்களெல்லாவற்றுக்கும் அடித்தலையாகையாலும், மற்ற எம்பெருமான்களைச் சொல்லாதே இவர் தம்மையே ப்ரதாநராகச் சொல்லுகிறார்.

"அம்பொனரங்கர்க்கு" என்று விவரணவிவரணீயபா(ஷா)வாபந்நங்களான அகாரநாராயண பதங்களினுடைய அர்த்தத்தையும், "அரங்கர்க்கு" என்கிறவிபக்தியாலே லுப்தசதுர்த்தியினுடைய அர்த்தத்தையுமுட் கொண்டருளிச் செய்தாராய், மேல் (க) "மகாரோ ஜீவவாசகః-மகாரோஜீவவாசகஃ" என்கிறபடியே இச்சேஷத்வாஶ்ரயமான சேதநவஸ்துவை ஸாப்தமாகப்ரதிபாதிக்கிறமகாரத்தினுடையவும், அதிலந(ஷ)பிஹிதங்களான இச்சேதநவஸ்துவினுடைய நித்யத்வைகத்வ பஹுத்வாதிகளை ஸாப்தமாகச்சொல்லுகையாலே ஏதத்விவரணமான நாரபதத்தினுடையவு மர்த்தத்தையுட்கொண்டருளிச் செய்கிறார்.

(ஆவிக்கும்) ப்ரத்யயங்களுக்கு-ப்ரக்ருத்யர்த்தகதஸ்வார்த்தபோத(போ)கத்வம் நியதமாகையாலே, லுப்தசதுர்த்யர்த்தமானஶேஷத்வம் ப்ரக்ருத்யர்த்தமான ஈஶ்வரகதமாகவேண்டியிருக்க, சேதநகதமானபடியெங்ஙனேயென்னில்; இங்குச்சேஷத்வமாகிறது-ஸம்பந்தவிஶேஷாத்மகமாய்க்கொண்டு உபயநிரூப்யமாகையாலே சேதநகதமானாலும் ஈஶ்வரகதமென்னக்குறையில்லையிறே.

(ஆவிக்கும்) "அம்பொன்" என்கிறபதங்களை இங்கும்கூட்டிக்கொள்வது; இப்படி நிருபாதிகஶேஷியான பெரியபெருமாளுக்குச் சேஷமாய் ப்ரக்ருதேঃபரமாய் ஜ்ஞாநாநந்தமயமாய் ஜ்ஞாநகுணகமாய் நிர்விகாரமாய், ஏகரூபமாய், பத்த(பத்த) முக்த நித்ய ரூபேண த்ரிவிதமான ஆத்மவஸ்துவுக்கும், (உ) "பதிம்விஶ்வஸ்ய-பதிம்விஶ்வஸ்ய" என்றும் (ங) "மூவுலகாளி" என்றும், (ச) "என்னையாளன்" என்றுமித்யாதிகளாலே பெரியபெருமாளைவகுத்த ஶேஷியாகவும், சேதநவர்க்கம் தச்சேஷமாகவும்சொல்லிற்றிறே. "ஸர்வம் ஹிதம் ப்ராணிநாம் வ்ரதம்-ஸர்வம்ஹிதம்ப்ராணிநாம்வ்ரதம்" என்கையாலே ப்ராணனாகிறது பஞ்சவ்ருத்திப்ராணனே யாகிலும்,

(க) (உ) தை-நா (ங) தி-வாய்-எ-உ-கO. (ச) பெரி-தி-ச-க-கO.

(க)"ஆவிக்கோர்பற்றுக்கொம்பு" என்றவைபாதிசேதநனிடத்தி லும் ப்ரயோகிக்கக்காண்கையாலே அத்தைப்பின்சென்று இவ ரும் இப்படியே ப்ரயோகிக்கருளுகிறார்.

(அம்பொனரங்கர்க்கு பாவிக்கும்) அர்த்தபஞ்சகம் திடக் கமானவற்றிலே ஸ்வஸ்வரூபம் முன்னாகப்பரஸ்வரூபத்தைப்பின் னே அருளிச்செய்தாராயாகிலும்,(உ)' యస్యాస్మి-யஸ்யாஸ்மி' இத் யாதிஶ்ருதிகளிலும் அவற்றுக்கடியான ப்ரணவத்திலும் "ప్రాప్య స్య బ్రహ్మణోరూపమ్-ப்ராப்யஸ்யப்ரஹ்மணோரூபம்" இத்யாதிவசந ங்களிலும் பரஸ்வரூபம் முன்னாக ஸ்வஸ்வரூபத்தைச் சொல்லு கையாலே அத்தை அடியொத்தி இவரும் இப்படியே நிர்த்தே ஶிக்கிறா.

(ங)"యువతిశ్చకుమారిణీ-யுவதிஶ்சகுமாரிணீ" என்கிற ஸமு ச்சயம் அந்வாச(ச)ய மானவோபாதி "அரங்கர்க்குமாவிக்கும்" என்கிற இஸ்ஸமுச்சயம் அந்வாசயமத்தனை போக்கிஸமஸமுச்ச யமன்று. ஶேஷஶேஷிகளுக்கு ஸமப்ராதாந்ய மில்லையிறே, (ச)'భోగమాత్రసామ్యలిఙ్గాచ్చ-போகமாத்ரஸாம்யலிங்காச்ச" జగద్వ్యాపారవర్జమ్-ஜகத்வ்யாபாரவர்ஜம்" என்கையாலே சேதநனுக்கு ஈஶ்வரனோடே (భోగ) போகமாத்ரத்திலே ஸாம்யமொழியஸர்வப்ர காரஸாம்யமில்லையிறே. (ரு) "నిరఞ్జనః పరమం సామ్యముపైతి-நிரஞ்ஜநः பரமம்ஸாம்யமுபைதி"(சு) "మమసాధర్మ్యమాగతాః - மமஸாதர்ம்ய மாகதாः"(எ) 'தம்மையேநாளும வணங்கித்தொழுவார்க்குத்தம் மையேயொக்கவருள் செய்வர்" இத்யாதிகளுக்கும் இதிறேஹ்ரு தயம்.

அநந்தரம், "అవధారణమన్యేతు మధ్యమాస్తంవదన్తిహి-அவதாரண மந்யேதுமத்யமாந்தம்வதந்திஹி" என்றும்,(அ)'అస్వాతన్త్ర్యన్తుజీవా నామాధిక్యంపరమాత్మనః । నమః ప్రాచ్యతేతస్మిన్నహంతామమతోజ్ఝితా - அஸ்வாதந்த்ர்யந்து ஜீவநாமாதிக்யம் பரமாத்மநः। நமஸா ப்ரோ ச்யதே தஸ்மிந்நஹந்தாமமதோஜ்ஜிதா" என்றும் சொல்லுகிற

(க) தி-வாய்-கப-க-ங. (உ) யஜு-உ-அஷ்டக. (ங)
(ச) ப்ரஹ்மஸூ-ச- (ரு) முண்-ங-க-ங. (சு) கீ-கச-உ.
(எ) தி-மொ-கக-ங-ரு. (அ) பகவச்சாஸ்த்ரம்.

படியே அந்யஶேஷத்வநிவ்ருத்தி பகவச்சேஷத்வங்களை ஶாப்த மாகப்ரதிபாதிக்கிற உகாரத்தினுடையவும், அதில் அநுக்தங்க ளானஸ்வார்ஹத்வ அசித்வத் பாரதந்த்ர்யாதிகளை ஶாப்தமாகச் சொல்லுகையாலே தத்விவரணமான நமஸ்ஸினுடையவுமர்த்தத் தை யுட்கொண்டருளிச் செய்கிறார்.

(அந்தரங்கசம்பந்தம் காட்டி) இவ்விருவர்க்கு முண்டான அநந்யார்ஹஶேஷத்வமாகிற அந்தரங்கஸம்பந்தத்தைஸ்வஶேஷ நிவ்ருத்தி அசித்வத்பாரதந்த்ர்யபர்யந்தமாகவும், தத்பராகாஷ் டையான பாகவதஶேஷத்வ பர்யந்தமாகவும் வெளியிட்டுக்கொ டுத்ததிறே, ஸவிவரணமான உகாரத்துக்கர்த்தம்; "ఉకారో నన్యార్హం నియమయతి సంబన్ధమనయోః-உகாரோநந்யார்ஹம் நியமயதி ஸம் பந்தமநயோ:" என்னக்கடவதிறே; ஸம்பந்தமாத்ரம் இதரஶே ஷத்வோபமர்தி(ஶ)யல்லாமையாலும், ஸ்வவிரோத்யநநுஸஹ மாகையாலும் "அந்தரங்கம்" என்றத்தை இங்ஙன் விஶேஷிக் கிறார்.

ஸ்தாநப்ரமாணத்தாலே அவதாரணார்த்தமாக உகாரம் விஶேஷண ஸங்கதமாகையாலே அயோகவ்யவச்சேதமா மிது தனைபோக்கி அந்யயோகவ்யவச்சேதமானபடி யெங்ஙனேயென் னில்; விஶேஷணவிஶேஷ்யங்கள் ஸமாநவிபக்த்யா நிர்த்திஷ் டங்களான விடத்திலே அந்நியமொழிய அஸமாநவிபக்த்யா நிர்திஷ்டங்களான விடத்திலே அந்நியமில்லாமையாலே, இந்த ஏவகாரம் அந்யயோகவ்யவச்சேதக மென்னக்குறையில்லை. "దేవ దత్తమ్ప్రత్యేవదణ్డనమ్ - தேவதத்தம் ப்ரத்யேவ தண்டநம்" இத்யாதி ப்ரயோகங்களிலே இவ்வர்த்தம் ஸம்ப்ரதிபந்நமிறே.

அன்றிக்கே, அந்தரங்கஸம்பந்தமாகிறது - "పితా చ రక్షకః శేషీ భర్తా జ్ఞేయో రమాపతిః । స్వామ్యాధారో మమాత్మా చ భోక్తా చాద్యమనూదితః - பிதாசரக்ஷகஶ்ஶேஷீ பர்த்தாஜ்ஞேயோ ரமாபதி:| ஸ்வாம் யாதாரோமமாத் மாசபோக்தாசாத்யமநூதித:" என்கிறபடியே இவ்விருவர்க்குமுண்டான திருமந்த்ரத்தில் ப்ரக்ருதிப்ரத்யய தாது பதங்களாலே ப்ரதிபாதிக்கப்படுகிற நவவிதஸம்பந்தமாகவு மாம்.

திருமந்த்ரந்தான் ப்ரதமபதமான ப்ரணவத்தில் வைத்துக் கொண்டு ப்ரதமாக்ஷரமான அகாரத்தில் ப்ரக்ருத்யம்ஶத்தாலே (௧) "పితా - నారాయణః" "பிதாநாராயண:" என்றும் (௨) "దేవదేవో హరిః పితా - தேவதேவோஹரி:பிதா" என்றும், (௩) "எம்பிரானெந்தை" என்றும் சொல்லுகிறபடியே பிதாபுத்ரபாவ ஸம்பந்தத்தையும்,

அதில், "அவ ரக்ஷணே" என்கிற தா(தா)த்வம்ஶத்தாலே(௪) "కో హ్యేవాన్యాత్కః ప్రాణ్యాత్ - கோஹ்யேவாந்யாத்க: ப்ராண்யாத்" என்றும், (௫) "నహి పాలనసామర్థ్య మృతే సర్వేశ్వరం హరిమ్-நஹிபாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம்ஹரிம்" என்றும், (௬) "கருத்தில் தேவுமெல்லாப்பொருளும் வருத்தித்தமாயப்பிரானை" என்றும் சொல்லுகிறபடியே ரக்ஷ்யரக்ஷகபாவ ஸம்பந்தத்தையும்,

ப்ரத்யயமானவிதில் லுப்தசதுர்த்த்யம்ஶத்தாலே(௭) "పతిం పతీనాం - பதிம்பதீநாம்" என்றும், (௮) "జగత్పతిం దేవదేవమ్ - ஜகத்பதிம் தேவதேவம்" என்றும், (௯) "அமரர்களதிபதி" என்றும் சொல்லுகிறபடியே ஶேஷஶேஷிபாவஸம்பந்தத்தையும், த்விதீயாக்ஷரமான உகாரத்தில் அவதா(தா)ரணமாகையாலே, (௧௦) "భగవత ఏవాహమ్-பகவதஏவாஹம்" என்றும், (௧௧) "లోకభర్తారమ్-லோகபர்த்தாரம்" என்றும், (௧௨) "பறவையேறு பரம்புருடா நீயென்னைக் கைக்கொண்டபின்" என்றும் சொல்லுகிறபடியே பர்த்ருபார்யாபாவ ஸம்பந்தத்தையும், த்ருதீயாக்ஷரமான மகாரத்திலே "మన అవబోధనే - மந - அவபோதநே" என்கிற தாதுவாலே "నిదిధ్యాసితవ్యః - நிதித்யாஸிதவ்ய:" என்றும், (௧௩) "ధ్యేయో నారాయణస్సదా - த்யேயோநாராயணஸ்ஸதா" என்றும், (௧௪) "உணர்வினுள்ளே யிருத்தினேன்" என்றும் சொல்லுகிறபடியே ஜ்ஞாத்ருஜ்ஞேயபாவஸம்பந்தத்தையும்,

த்விதீயபதமான நமஸ்ஸாலே(௧௫) "ఈశానో భూతభవ్యస్య-ஈஶாநோ பூதபவ்யஸ்ய" என்றும், (௧௬) "స్వత్వమాత్మని సంజాతం స్వామిత్వం

(௧) ஸா-பால- (௨) வி-பு-௧- (௩) தி-மொ-௧-௧-௯.
(௪) தை-ஆந- (௫) வி-பு-௧-௨௨-௨௧. (௬) தி-வாய்-௨-௨-௮.
(௭) ப்வேத- (௮) பராத (௯) தி-வாய்-௧-௧-௧.
(௧௦) (௧௧) ராஸா-௩-௮-௫௯. (௧௨) பெரி-தி-௫-௪-௨.
(௧௩) பாரா- (௧௪) தி-வாய்-௮-௮-௩. (௧௫) தை-நா- (௧௬)

బ్రహ్మణిస్థితమ్ - ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்திதம்" என்றும், (க) "உலகம் மூன்றுடையாய்" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வஸ்வாமி பாவஸம்பந்தத்தையும்,

த்ருதீயபதமான நாராயணபதத்தில் நாரமென்கிற அம்ஶத்தாலே-(உ) "యస్యాత్మా శరీరం యస్య పృథివీ శరీరమ్- யஸ்யாத்மாஶரீரம் யஸ்யப்ருதிவீஶரீரம்" என்றும், (ஙு) "జగత్సర్వం శరీరన్తే-ஜகத்ஸர்வம் ஶரீரம்தே" என்றும், (ச) "உம்முயிர்வீடுடையானிடை" என்றும் சொல்லுகிறபடியே ஶரீரஶரீரிபாவஸம்பந்தத்தையும்,

அயநமென்கிற அம்ஶத்தாலே (ரு) "సదాయతనాః-ஸதாயதநாஃ" என்றும், (சு) "మయి సర్వమిదం ప్రోతం సూత్రే మణిగణా ఇవ - மயிஸர்வமிதம்ப்ரோதம் ஸூத்ரேமணிகணா இவ" என்றும், (எ) "மூவுலகும் தன்னெறியா வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தார்" என்றும் சொல்லுகிறபடியே ஆதாராதேயபாவ ஸம்பந்தத்தையும்,

வ்யக்தசதுர்த்த்யம்ஶத்தாலே (அ) "అహమన్న మహమన్నమ్- அஹமந்ந மஹமந்நம்" என்றும், (கூ) "భోక్తారం యజ్ఞతపసామ్ - போக்தாரம் யஜ்ஞதபஸாம்" என்றும், (க0) "என்னைமுற்று முயிருண்டு" என்றும் சொல்லுகிறபடியே, போக்த்ருபோக்ய(భోక్తృ భోగ్యభా) பாவஸம்பந்தத்தையும் ஶாப்தமாகச்சொல்லுகையாலே இது இருவர்க்குமுண்டான நவவிதஸம்பந்தத்தை ப்ரதிபாதிக்கக் கடவதாயிருக்குமிறே.

ஏவம்விதமான ஸம்பந்தத்தை(கக) "அறியாதனவறிவித்த" என்கிறபடியே ஓராசார்யன் அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ண, இச்சேதநன் தெளியவறிந்த பின்பிறே இவனுக்கு (கஉ) "கண்ணபுரமொன்றுடையானுக் கடியேனொருவர்க்குரியேனோ" என்றிருக்கையாகிற ஸ்வரூபத்திலுணர்த்தியும், (கங) "என்நான் செய்கேன் யாரேகளைகண்" என்றிருக்கையாகிற ஸ்வரக்ஷணத்

(க) தி-வாய்-சு-க0-க0. (உ) ஸுபால- (ங) ரா-யு-கஉ0-உசு.
(ச) தி-வாய்-க-உ-க. (ரு) சாந்தோ-(சு) கீதை-எ-எ-(எ) தி-வாய்-அ-எ.
(அ) தை-ப்ருகு (கூ) கீதை-(க0) தி-வாய்-க0-எ-(கக) தி-வாய்-உ-ங-உ
(கஉ) தி-மொ-அ-கூ-ங. (கங) தி-வாய்-ரு-அ-ங.

திலஶக்தியும் "உன்னாலல்லால் யாவராலுமொன்றும் குறை வேண்டேன்" என்றிருக்கையாகிற ப்ராபகத்திலத்யவஸாயமும்,

(க) "மாகவைகுந்தம் காண்பதற்கென்மனமேகமெண்ணும்" என்றிருக்கையாகிற ப்ராப்யத்தில் த்வரையும், (உ) "பாம்போடொருகூரையிலே பயின்றாப்போல்" என்றிருக்கையாகிற விரோதியில் பீ(ஂ)தியும், (ங) "அவனடியார்சிறுமாமனிசராயென்னை யாண்டாரிங்கேதிரிய" என்றிருக்கையாகிற உத்தேஶ்யவிஷயத்தில் கௌரவமும், (ச) "பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு" என்றிருக்கையாகிற உபகாரவிஷயத்தில் க்ருதஜ்ஞதையும், (ரு) "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்" என்றிருக்கையாகிற உத்தாரகவிஷயத்தில் ப்ரதிபத்தியும்,

அவனுடைய நிருபாதிகஶேஷித்வத்தையும், தன்னுடைய நிருபாதிக ஶேஷத்வத்தையும் தெளியவறிகையாகிற ஸம்பந்த ஜ்ஞாநமும், அவனுடைய நிருபாதிகஶரீரித்வத்தையும், தன்னுடைய நிருபாதிக ஶரீரத்வத்தையும் தெளியவறிகையாகிற ஸம்பந்த யாதாத்ம்யஜ்ஞாநமும், அவனுடைய நிருபாதிக தர்மித்வத்தையும், தன்னுடைய நிருபாதிக தர்மத்வத்தையும் தெளியவறிகையாகிற ஸம்பந்தஸ்வரூப ஜ்ஞாநமும், தர்மதர்மிகளுடைய விஶேஷைக்யத்தாலே அவனேயாய், "தானில்லை" என்னலாம்படியிருக்கையைத் தெளியவறிகையாகிற ஸம்பந்தஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநமும்,

பகவத்தாஸ்யத்தையே யிட்டுஸதாசாரத்தை நெகிழாதே ஶப்தாதிவிஷயங்களில் அச்சமும், கைங்கர்யபாவத்தில் ஆர்த்தியும் விளைகையாகிற ஶேஷத்வத்தில் கர்த்த்ருத்வாதி நிவ்ருத்தியும், நிஷித்தங்களைவிட்டு விஹிதங்களைப் பற்றினவாறே "நான் ஜ்ஞாதாவாகையாலேயன்றோ என்னை அவனங்கீகரித்தது" என்று தன்ஜ்ஞாத்ருத்வத்தையிட்டு இறுமாவாதேயிருக்கையாகிற ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்த்ருத்வ நிவ்ருத்தியும்.

---

(க) தி-வாய்-கூ-ட-ன. (உ) தி-மொ-கக-அ-ட (ங) தி-வாய்-அ-க0-ங
(ச) தி-வாய்-௧0-ரு-ங-௪0 (ரு) தி-வாய்-௧0-௪0-ட

"நிஷித்தங்களைவிட்டு விஹிதங்களைப் பற்றினவாறேயன்றோ என்னை அவனங்கீகரித்தது" என்று தன்ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையிட்டு இறுமாவாதேயிருக்கையாகிற ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளில்கர்த்த்ருத்வநிவ்ருத்தியும், அவனுக்குத்தானடிமைசெய்யுமிடத்தில் அதுஸ்வரஸத்துக்குடலென்றிராதே அவயவபூதமான இவ்வாத்மவஸ்து அவயவியான வெம்பெருமானுக்கு எடுத்துக்கை நீட்டுகிறதென்றிருக்கையாகிற போ(க்)க்த்ருத்வத்தில் கர்த்த்ருத்வநிவ்ருத்தியும் தொடக்கமான ஆகாரவிசேஷமுண்டாகிறது.

(அந்தரங்கசம்பந்தம்காட்டி) இஸ்ஸம்பந்தந்தான், (க) "ப்ராப்தம் லக்ஷ்மீபதேர்தாஸ்யம் ஶாஶ்வதம் பரமாத்மந꞉ - ப்ராப்தம் லக்ஷ்மீபதேர்தாஸ்யம்ஶாஶ்வதம்பரமாத்மந꞉" என்றும், (உ) "தாஸபூதா꞉ ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந꞉ பரமாத்மந꞉- தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வேஹ்யாத்மாந꞉ பரமாத்மந꞉" என்றும், (ங) "நாராயணன் திருமால்நாரம் நாமென்னுமுறவு ஆராயில்நெஞ்சேயநாதியன்றோ?" என்றும் சொல்லுகிறபடியே வந்தேறியன்றிக்கே அநாதியாய்ப்போருகையாலே "காட்டி" என்கிறார். முன்கண்டாரிருக்குமதிறே லோகத்திலே காட்டக்கடவது.

இஸ்ஸம்பந்தத்தை ஒருவன் வெளியிட்டுக்கொடுக்கப்பெறுமையாலே (ச) "யானேயென்னை யறியகிலாதேயானே யென்றனதே யென்றிருந்தேன்" என்கிறபடியே நெடுங்காலம் தன்னை உள்ளபடி அறியமாட்டாமல் தேஹாத்மாபிமாநியாய், மாறி மாறிப் பலபிறப்பும்பிறந்து * மற்றோர்தெய்வம் பாடி யாடிப் பணிந்து * வழிதிகைத்து (ரு) "அஸந்நேவ-அஸந்நேவ" என்றும் (சா) "பொருளல்லாத" என்றும்சொல்லுகிறபடியேஉருமாய்ந்து நித்யஸம்ஸாரியாய்ப் போந்திருந்து "மகாரேணஸ்வதந்த்ரஸ்ஸ்யாத் - மகாரேணஸ்வதந்த்ரஸ்ஸ்யாத்" என்கிறபடியே பதத்வயாத்மகமான நமஸ்ஸில் ஸ்வஸ்வாதந்த்ர்ய ப்ரதிபாதகமான மகாரத்தினுடைய அர்த்தத்தையுட் கொண்டருளிச்செய்கிறார்.

---

(க) (உ) (ங) (ச) தி-வாய்-உ-கூ-கூ.
(ரு) தை-ஆ௬. (சா) தி-வாய்-ரு-எ-ங.

(தடைகாட்டி)கீழ்ச்சொன்ன இஸ்ஸம்பந்தஜ்ஞாநத்துக்கும் ப்ரதிஸம்பந்தியான ஈஶ்வரனிடத்தில் பரத்வப்ரதிபத்திக்கும் சேதநனிடத்தில் பகவதநந்யார்ஹ ஶேஷத்வப்ரதிபத்திக்கும் மேற்சொல்லுகிற திவமென்னும் வாழ்வாகிற கைங்கர்யத்தில் ப்ராப்யத்வப்ரதிபத்திக்கும் சேர்ந்தநெறியாகிற அவன் திருவடிகளில் ப்ராபகத்வப்ரதிபத்திக்கும் விரோதியின்னதென்னுமிடத்தை வெளியிட்டுக்கொடுத்து,

அவ்விரோதியாகிறது - அபரவஸ்துக்களில் பரத்வபுத்தியும், அரக்ஷ்யரிடத்தில் ரக்ஷகத்வபுத்தியும், அநீஶ்வரனிடத்தில் ஈஶ்வரத்வபுத்தியும்; அஶேஷிகளிடத்தில் ஶேஷித்வபுத்தியும், அநுபாஸ்யரிடத்தில் உபாஸ்யபுத்தியும், அநாத்மாவில் ஆத்மபுத்தியும், அஸ்வதந்த்ரனை தன்னிடத்தில் ஸ்வதந்த்ரபுத்தியும், அநுபாயங்களில் உபாயத்வபுத்தியும், அபந்துக்களில் பந்துத்வபுத்தியும், அபோக்யங்களில் போக்யதாபுத்தியும், பகவத்கைங்கர்யத்தில் ஸ்வபோ(ஞ்)க்த்ருத்வபுத்தியும், இவையெல்லாவற்றுக்கும் வேர்ப்பற்றான அஹங்கார மமகாரங்களும்.

இவ்விரோதி வர்க்கத்தையிறே,(க)"పురతః పృష్ఠతశ్చైవ స్థానతశ్చ విశేషతః। నమసావీక్ష్యతే రాజన్-புரதஃப்ருஷ்டதஶ்சைவ ஸ்தாநதஶ்ச விசேஷதஃ। நமஸாவீக்ஷ்யதேராஜந்" என்றும்,(உ)"అక్షితే న పురతః పశ్చాదపి స్థానతః- ஈக்ஷிதே நபுரதஃ பஶ்சாதபிஸ்தாநதஃ" என்றும் சொல்லுகிறபடியே காகாக்ஷிந்யாயேந ப்ரதமசரம பதங்களோடே அந்விதமாயும், ஸ்வதந்த்ரமாயும் ஸ்வதஏவஸ்தாநியானநமஸ்ஸோடே அந்விதமாயுமிருந்துள்ள ஸக(க)ண்டநமஸ்ஸில்ஷஷ்ட்யந்தமான மகாரம் காட்டுகிறது.

ஏவம்பூதமானஇந்தவிரோதிவர்க்கத்தைக்காட்டுகையாவது (ங) "నారాయణం పరిత్యజ్య హృదిస్థం పతిమీశ్వరమ్। యోఽన్యమర్చయతే దేవం పరబుద్ధ్యా స పాపభాక్-நாராயணம்பரித்யஜ்யஹ்ருதிஸ்தம்பதிமீஶ்வரம்|யோந்யமர்ச்சயதேதேவம் பரபுத்த்யாஸபாபபாக்" என்றும், (ச) "స్వాతన్త్ర్యమన్యశేషత్వమాత్మాపహరణం విదుః - ஸ்வாதந்த்ர்யமந்யஶேஷத்வமாத்மாபஹரணம்விதுஃ"(ரு)"అశాదన్యార్హ శేషత్వం విరుద్ధం

---

(க) (உ) அஷ்டஶ்லோகி (ங) (ச) (ரு)

త్యాజ్యమేవతత్ - ஈஶாநர்யார்ஹஶேஷத்வம்விருத்தம்த்யாஜ்யமேவ தத்" என்றும், (க) "వాసుదేవంపరిత్యజ్యయోఽన్యందేవముపాసతే। తృషితో జాహ్నవీతీరేకూపం ఖనతిదుర్మతిః - வாஸுதேவம்பரித்யஜ்யயோந்யம் தேவமுபாஸதே।த்ருஷிதோஜாஹ்நவீதீரே கூபம்கநதிதுர்மதிः" என்றும் (உ) "ఉపాయాపాయసంయోగేనిష్ఠయాహీయతేఽనయా - உபாயாபாயஸம்யோகே நிஷ்டயாஹீயதேநயா" என்றும், (ங) "విషయాణాంతుసంయోగాద్యోబిభర్తిసుఖంనరః। నృత్యతఃఫణినశ్ఛాయాంవిశ్రమాయాశ్రయేతసః - விஷயாணாந்துஸம் யோகாத்யோபிபர்த்திஸுகம் நரः।ந்ருத்யதःபணிநஶ்சாயாம்விஶ்ரமாயாஶ்ரயேதஸः" என்றும் (ச) "అహంకారార్థకామేషు ప్రీతిరద్యైవనశ్యతు - அஹங்காரார்த்தகாமேஷு ப்ரீதிரத்யைவநஶ்யது" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேஶ்வரன் தூடக்கமாறுரிடத்தில் ப்ரத்வாதி ப்ரதிபத்திக்கு விரோதியான இந்தவிபரீதபுத்தி த்யாஜ்யமென்னுமிடத்தை ஸநிதர்ஶநமாகவும் ஸோபபத்திகமான ஸ்வோபதேஶத்தாலே விஶததமமாம்படி வெளியிட்டுக்கொடுக்கை.

அநந்தரம் "సాధనంనమసాతథా - ஸாதநம் நமஸா ததா" "తస్మాచ్చతుర్థ్యామంత్రస్యప్రథమందాస్యముచ్యతే - தஸ்மாச்சதுர்த்த்யாமந்த்ரஸ்யப்ரதம் தாஸ்யமுச்யதே" என்றும்சொல்லுகிறபடியே உபாயவாசியானநமஸ்ஸினுடையவும் ஸர்வதேஶஸர்வகாலஸர்வாவஸ்தோசிதமானகிஞ்சித்காரத்துக்கு ப்ரகாஶகமாயிருந்துள்ள வ்யக்தசதுர்த்தியினுடையவும் அர்த்தத்தையுட்கொண்டருளிச் செய்கிறார் (உம்பர்திவமென்னும் வாழ்வுக்குச் சேர்ந்தநெறிகாட்டுமவன்) (ரு) "దేవానాంపూరయోధ్యా - தேவாநாம்பூரயோத்யா" என்றும் (சு) "வானவர்நாடு" என்றும் சொல்லுகிறபடியே இவ்வருகிருப்பார்க்கெல்லாம் மேலாயிருந்துள்ள நித்யஸூரிகளுக்கு இஷ்டவிநியோகார்ஹமாய், (எ) "தெளிவிசும்புதிருநாடு" என்றும், (அ) "అత్యర్కానలదీప్తంతత్స్థానంవిష్ణోర్మహాత్మనః - அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மநः" என்றும்

(க) ப்ராஜாபத்யஸ்ம்ருதி. (உ) லக்ஷ்மீதந்—கஎ-அரு (ங)
(ச) ஜிதந்தே-க- (ரு) யஜுஃ- ஆரண்ய-க. (சு) தி-வாய்-ங-சு-க,
(எ) தி-வாய்-சு-எ-ரு. (அ) பார-ஆரண்ய.

சொல்லுகிறபடியே நிரவதிகதேஜோரூபமாய் (க) "த்ரிபாதஸ்யாம்ருதம் திவி - த்ரிபாதஸ்யாம்ருதம்திவி" என்றும், (உ) "த்ரிபாத்விராட் - த்ரிபாத்விராட்" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேஶ்வரனுக்கு போக்யபோகோபகரண போகஸ்தாநரூபேண யிருந்துள்ள த்ரிபாத்விபூதியிலே (ங) "நசபுநராவர்த்ததே - நசபுநராவர்த்ததே" என்றும், (ச) "அநாவ்ருத்திஶ்ஶப்தாத்-அநாவ்ருத்திஶ்ஶப்தாத்" என்றும் (ரு) "மீட்சியின்றி வைகுந்தமாநகர்" என்றும் சொல்லுகிறபடியே புநராவ்ருத்தியின்றிக்கே நித்யகைங்கர்யத்திலே நிரதராயிருக்கையாகிற வாழ்வுக்குநேரேஅநுரூபமான உபாயத்தை வெளியிட்டுக்கொடுக்குமவன்.

(உம்பர்திவம்) தேசிகனைப்போலே தேசத்தையும் ததீயரையிட்டு நிரூபிக்கவேண்டியிருக்கும் போலேகாணும். திவமென்று சொன்னதுக்கடி - பொன்னுலகென்னும்படியான நிலமிதுவாய்த்தென்றும், (சு) "இமாந்லோகாந் காமாந்நீகாமரூப்யநுஸஞ்சரந் - இமாந்லோகாந் காமாந்நீகாமரூப்யநுஸஞ்சரந்" என்றும் ஸ்வைரஸஞ்சரணமாகையாலேயிறே விரோதியென்றும்,

(வாழ்வுக்கு) நித்யகைங்கர்யமென்றும், வாழ்ச்சியென்றும் பர்யாயம்போலேகாணும். (எ) "வேங்கடத்தைப்பதியாக வாழ்வீர்காள்" என்னக்கடவதிறே, (சேர்ந்தநெறி) அநுரூபமான வுபாயம். வாழ்வுக்குச்சேர்ந்த நெறியென்று ப்ராப்யப்ராபகங்களைச்சேர ஒன்றுக்கொன்று ஸத்ருஶமாக வருளிச்செய்தது ஸ்வீகாரவிஷயபூதன் ப்ராபகம்; பரிசர்யாவிஷயபூதன்- ப்ராப்யமென்கையாலே இவ்விரண்டினுடையவும் ஐக்யத்தைப்பற்ற. உபாயப்ரகரணத்தில் "இதுதன்னைப்பார்த்தால்" இத்யாதிகளில் சொல்லுகிற உபாயவைபவத்தை, "சேர்ந்த" என்கிற விசேஷணத்தால் ஸூசிப்பித்தருளுகிறாராயிற்று.

"சேர்ந்தநெறி" என்கையாலே, ¶சேர்ந்தநெறியுமுண்டாயிருக்குமாகாதேதான். அதாகிறது (அ) "ப்ராப்யப்ராபகம் -

---

(க) புருஷஸூக்தம் (உ) (ங) சாந்தோ-அ-கரு-க.
(ச) ப்ரஹ்மஸூ-சு-ச-ச. (சு) தை-ப்ருகு- (எ) ஈா-தி-அ-கூ.
(அ) ¶ (பா) சேராதநெறி.

மூ.—அஞ்சுபொருளுமளித்தவன்பாலன்பிலார்
நஞ்சில்மிகக்கொடியர் நாம்சொன்னோம்—நஞ்சுதான்
ஊனைமுடிக்கு மதுயிரைமுடிக்குமென்று
ஈனமிலார்சொன்னாரிவை. (உ)

பக்த்யாபரமயாவாபி" என்கிறபடியே "மோக்ஷஸாதநத்வேந வேதாந்தங்களில் விஹிதமாய்த்தல்ல." இத்யாதிப்படியே விவேகாதிஸாதநஸப்தக ஸாத்யமாய், த்ரு(த்ரு)வாநுஸ்ம்ருதிரூபமாய் கீழ்ச்சொன்ன ப்ராப்யத்துக்கு அத்யந்தவிஸத்ருஸமாய் விளம்ப்யப்லப்ரதமாயிருக்கும் பக்த்யுபாயம்.

(காட்டுமவனன்றோ வாசாரியன்) இப்படி "அம்பொனரங்கர்க்கு" என்று உபயலிங்கத்வ விஶிஷ்டமான பரஸ்வரூபத்தையும் "ஆவிக்கு" என்று - ததநந்யார்ஹஶேஷமான ஸ்வஸ்வரூபத்தையும், "தடை" என்று - த்யாஜ்யமான விரோதிஸ்வரூபத்தையும் "திவமென்னும் வாழ்வுக்கு" என்று - ஏதந்நிவ்ருத்த்யநந்தரபாவியான புருஷார்த்தஸ்வரூபத்தையும், "சேர்ந்தநெறி" என்று - இப்புருஷார்த்தத்துக்கு ஸத்ருஶஸாதநமான உபாயஸ்வரூபத்தையும், திருமந்த்ரோபதேஶமுகேந ஸங்க்ரஹமாகவும் ஸவ்யக்தமாகவும் வெளியிட்டுக் கொடுக்குமவனன்றோ ஸதாசார்யனாகிறானென்கிறார்.

இப்படி உபதேசிக்குமவனுக்கிறே, (௧) "ఆచినోతి హి శాస్త్రార్థానాచారే స్థాపయత్యపి। స్వయమాచరతే యస్తు స ఆచార్య ఇతీరితః - ஆசினோதி ஹி ஶாஸ்த்ரார்த்தாநாசாரே ஸ்தாபயத்யபி | ஸ்வயமாசரதே யஸ்து ஸ ஆசார்யஇதீரிதः" என்று சொல்லுகிற ஆசார்யலக்ஷணமுள்ளது. (உ) "நேரே ஆசார்யனென்பது - ஸம்ஸாரநிவர்த்தகமான பெரியதிருமந்த்ரத்தை உபதேசித்தவனை" என்கிற திவ்ய ஸூக்தியையுட்கொண்டு "காட்டுமவனன்றோ ஆசாரியன்" என்று ப்ரஸித்திதோன்ற வருளிச்செய்கிறார். (௩)

அவ;—இரண்டாம்பாட்டு. இப்படி ஸ்வோபதேசத்தாலே அர்த்தபஞ்சகஜ்ஞாநமுண்டாம்படி விஷயீகரித்தருளி ஏதந்முகேந மஹோபகாரகனான ஸ்வாசார்யன்பக்கலிலே (௩) "அறி

(௧) (உ) ஸ்ரீவசந (௩) தி-வாய்-உ-௩-உ.

யாதனவறிவித்த வத்தாநீசெய்தன வடியேனறியேனே" என்றும் (க) "என்னைத்தீமனம்கெடுத்தாய்" என்றும், (உ) "மருவித் தொழும் மனமேதந்தாய்" என்றும்சொல்லும்படியான உபகார ஸ்ம்ருதியாலே (ங) "తథామన్త్రప్రదేగురౌ । త్రిషుభక్తిస్సదాకార్యా - ததாமந்த்ரப்ரதேகுரௌ । த்ரிஷுபக்திஸ்ஸதாகார்யா" என்கிறபடியே மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் பண்ணக்கடவ ப்ரேமத்திற்காட்டில் அதிஶயிதமான ப்ரேமமில்லாதார் ஸ்வஸ்பர்ஶமாத்ரத்தாலே முடிக்கவற்றான விஷத்திலும் அதிக்ரூரராய், அத்தைப்போலே நஶ்வரமான ஶரீரத்தை நஶிப்பித்து விடுகையன்றிக்கே நித்யமான ஆத்மவஸ்துவை நஶிப்பித்து விடுமவரென்கிறார்.

வ்யா ;—(அஞ்சுபொருளுமித்யாதி) (ச) "உய்யும்வகை" என்றும், (ரு) "நின்றவொன்றை யுணர்ந்தேனுக்கு" என்றும், (சு) "நன்கறிந்தேன்" என்றும், (எ) "உணர்வினுள்ளே" என்றும், (அ) "ஆம்பரிசு" என்றும் அவஶ்யஜ்ஞாதவ்யதயா அறுதியிடப்பட்ட அர்த்தபஞ்சகத்தையு முபதேஶித்த ஆசார்யன் பக்கல்ப்ரேமமற்றிருக்குமவர்கள்,

(அஞ்சுபொருளும்) இவ்வர்த்த பஞ்சகத்தில் ஓரொன்றை யுபதேஶித்த வளவிலே கைவாங்கியிருந்தானாகிலன்றோ இவன் ப்ரேமமற்றிருக்கலாவது. (அஞ்சுபொருளும்) (கூ) "వదన్తి సకలా వేదాః-வதந்திஸகலாவேதா:" என்கிறபடியே வேதைகஸமதிகம்யமான அர்த்தபஞ்சகத்தையிறே இவனுபதேஶிப்பது.

(அளித்தவன்) இவ்வர்த்தபஞ்சகத்தை (கO) "సేవయా ఉపదేక్ష్యన్తి-ஸேவயா உபதேக்ஷ்யந்தி" என்றும், (கக) "குருக்களுக்கநுகூலராய்" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாநுவ்ருத்தியாலே ப்ரஸந்நனாய்க்கொண்டு உபதேஶிக்கையன்றிக்கே (கஉ) "பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல் நன்றாகத்திருத்திப் பணிகொள்வான்" என்கிறபடியே இத்தலையிலே தேனுமொரு நன்மையா

(க) தி-வாய்-உ-எ-அ. (உ) தி-வாய்- உ-எ-எ. (ங)
(ச) தி-வாய்-ரு-உ-ரு. (ரு) தி-வாய்-அ-அ-ரு. (சு) ச-திருவ-கூசு.
(எ) தி-வாய்-அ-அ-ங. (அ) திருமாலை-ஙஅ.
(கூ) வ்ருத்தஹாரீத (கO) கீதை (கக) பெரி-தி-ச-ச-உ.
(கஉ) கண்ணி-கO.

தல், த்ருஷ்டப்ரயோஜநத்தையாதல், தன்னிடத்திலாசார்யபதத்தையாதல், க்யாதிலாபபூஜைகளையாதல், (க) "ప్రజా)యాంతి-ப்ரப்ருயாத்" என்று ஒருவிதிபாரதந்த்ர்யதையாதல் கணிசியாதே, (உ) "కృపయానిస్పృహోవదేత్-க்ருபயாநிஸ்ப்ருஹோவதேத்" என்கிறபடியே தங்கள் தூர்க்கதியே பற்றாசாகவுண்டான பரமக்ருபையாலே நிரபேக்ஷனைக் கொண்டு உபதேசித்தருளினவன்.

(அளித்தவன்) (௩) "శుశ్రూషురస్యాద్య - ஶாஶ்ருஷுரஸ்யாத்ய" என்கிறபடியே அவஶ்யம் கர்த்தவ்யதயாவிஹிதையான ஶாஶ்ருஷை முன்னாக உபதேசித்தவனாகிலிறே இவனுக்கு ப்ரேமமற்றிருக்கலாவது. இத்தலையிலர்த்தித்வமும் கூடவில்லாதிருக்க முலைக்கடுப்பாலே பீச்சுவாரைப்போலே க்ருபைநீவடிம்பிட்டுக் கொடுக்க, தத்பரதந்த்ரனைக்கொண்டு அளித்தானாயிற்று.

(அன்பிலார்) அங்கீகரிக்கில், (௪) "உங்குருக்கள் தம்பதத்தேவையுமன்பு தன்னையிந்த மாநிலத்தீர்" என்றுதத்வதர்ஶிகளாலே அவஶ்யம் கர்த்தவ்யதயா அறுதியிடப்பட்டப்ரேமமில்லாதவர்கள்.

ஏவம்பூதரான இவர்கள்படியெங்ஙனே யென்னில்; (நஞ்சில் மிகக்கொடியர்) நஞ்சுகொடிது; இவர்கள் மிகக்கொடியர். விஷம்க்ரூரமாயிருக்கும்; இவர்கள் அதிலுங்காட்டில் க்ரூரராயிருப்பர்கள்.

இவ்வர்த்தத்தையறியும்படி யெங்ஙனேயென்ன; (நாம்சொன்னோம்) வேறொரு ப்ரமாணம் கொண்டாதல், உபதேஶம்கொண்டாதலறிய வேண்டாதபடி அவதாரவிஶேஷமான பிள்ளைலோகாசார்யருடைய திருவடிகளிலே சிரகாலம் ஸேவைபண்ணி, தத்வஹித புருஷார்த்தங்களைச் சரமபர்யந்தமாக அருளிச்செய்யக்கேட்டு தந்நிஷ்டராயிருக்கிற நாம்சொன்னோம். பிள்ளைலோகாசார்யர்திருவடிகளை ஆஶ்ரயித்ததமக்கு ஸப்ரஹ்மசாரிகளான கூரகுலோத்தம தாஸர்துடக்கமானாரைக் கூட்டிக்கொண்டு "நாம்" என்கிறார். நாமறுதியிட்டவர்த்தமென்று லோகம்பரி

---

$ (பா) வரம்பிட்டு

(க) (உ) (௩) (௪) உபதேசர-மா-

க்ரஹிக்கும்படியான பெருமதிப்பராய் ஆப்ததமராய் ஸர்வஜ்ஞராயிருக்கையாலே நாம் சொன்னோமென்கிறார்.

(சொன்னோம்)(௧)"சொல்லுமவிடுசுருதியாம்" என்னும்படியான ஏற்றமுடையதாயும்.(௨)"ఋషీణాంపునరాద్యానాం వాచమర్థోనుధావతి - ரிஷீணாம்புநராத்யாநாம் வாசமர்த்தோநுதாவதி" என்னும்படி அர்த்தஸ்பர்ஶியாயுமிறே தத்வதர்ஶிகளாயிருப்பார் வார்த்தையிருப்பது.

நஞ்சின்கொடுமை யெங்ஙனே; இதின்கொடுமை எங்ஙனேயென்ன; அவ்விரண்டையுமடைவே தர்ஶிப்பிக்கிறார் மேல்; (நஞ்சுதானித்யாதி) ஊனாகிறது-மாம்ஸமாய், ஊனையென்றது-மாம்ஸப்ரசுரமான ஶரீரத்தையென்றபடி; மாம்ஸத்தைச்சொன்னவிது-மற்றுமதிலுண்டான அஸ்ருக்பூயவிண் மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்திகளுக்கெல்லாமுபலக்ஷணம்.(௩)"మాంసాసృక్పూయవిణ్మూత్రస్నాయుమజ్జాస్థిసంహతే దేహే - மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்தி ஸம்ஹதள-தேஹே" என்றுமாம்ஸாதி மயமாகவிறே இத்தேஹத்தை நிரூபகராயிருப்பார் நிரூபிப்பது. (௪) "புண்ணை மறையவரிந்து" என்கிறபடியே தோலேமேவிக் கைப்பாணியிட்டு,மெழுக்குவாசியாலே ப்ரமிக்கும்படி பண்ணிவைக்கையாலே ஆந்தரமான மாம்ஸாதிகள் நேராகத் தோற்றுகிறனவில்லை. (௫) "యదినామాస్యదేహస్యయదన్తస్తద్బహిర్భవేత్ । దణ్డమాదాయలోకోయంశునః కాకాంశ్చవారయేత్ - யதிநாமாஸ்யதேஹஸ்யயதந்தஸ்தத்பஹிர்பவேத்| தண்டமாதாய லோகோயம்ஶுநஃ காகாம்ஶ்ச வாரயேத்" என்கிறபடியே அகவாய்புறவாயானால் காக்கைநோக்கப்பணிபோரும்படி இவைநேர்கொடுநேர் தோற்றுமிறே, ஆனாலும் மாம்ஸப்ரசுரமாகையாலேயன்றோ "ஊன்" என்றும், (௬) "ஊனில் வாழுயிர்" என்றும், (௭) "ஊனேய்குரம்பை" என்றும், ஆழ்வார்கள் நிர்த்தேஶித்தவோபாதி இவரும் "ஊனை" என்று நிர்த்தேஶித்தருளுகிறார், (௮) "శరీరంవ్రణవత్పశ్యేత్ - ஶரீரம்வ்ரணவத் பஶ்யேத்" என்று சொன்னாருமுண்டிறே.

---

(௧) ஞானஸாரம். (௨) உத்த-ரா-சரி. (௩) வி-பு-௧-௧௭-௬௩
(௪) தி-வாய்-௫-௧-௫. (௫)  (௬) தி-வாய்-௨-௩-௧.
(௭) தி-வாய்-௧௦-௮-௫ (௮)

(நஞ்சுதானாரைமுடிக்கும்) (க) "[illegible] - உபபுக்தம் விஷம்ஹந்தி" என்கிறபடியே, விஷமானது - ஸ்பர்ஶமாத்ரத்தாலே மாம்ஸப்ரசுரமான ஶரீரத்தை முடிக்கவற்றாயிருக்கும். முடிக்கையில் அதுக்குண்டான ப்ராதாந்யம்தோற்ற "நஞ்சு தான்" என்கிறார். முடிக்குமென்றது - ப்ராயிகாபிப்ராயம். மணிமந்த்ராதிகளுண்டாம்போது - முடிக்கமாட்டாதிறே.

(அதி உயிரைமுடிக்கும்) (உ) "என்று மனத்துயிர்க்கு மீளஞ்செய் நாரணனும் - அன்றும் தன்னாரியன்பாலன்பொழியில்" என்கிறபடியே ஆசார்யன்பக்கல் ப்ரேமமில்லாதான், ஸர்வஜ்ஞத்தனான ஈஶ்வரனுங்கூட * க்ஷிபாமி, * நக்ஷமாமிகளைப் பண்ணிக்கைவிடும்படிக்கு இலக்காயிருப்பானொருவனாகையாலே "[illegible] - ஸ ஆத்மஹா" என்கிறபடியே, இவன் நித்யமான ஆத்மவஸ்துவை முடித்துக்கொள்ளுமவன்.

(நஞ்சுதானித்யாதி) விஷமானது (ங) "[illegible]-ஶரீராக்ருதிபேதாஸ்து பூபைதே கர்மயோநய:" என்னும்படியே கர்மோபாதியான ஶரீரத்தைமுடித்து ஆத்மாவினுடைய ஸ்வாபாவிகாகாரத்துக்கு ஓரிடைச்சுவரைப்போக்கும். இவன், ஆத்மாவினுடைய ஸ்வாபாவிகாகாரத்தைமுடித்து (ச) "அழுக்குடம்பும் - இனியாமுறாமை" என்னும்படி தாஸ்ஸஹமான ஶரீரத்தைப் பூண்கட்டிக்கொண்டு நித்யஸம்ஸாரியாயிருக்கும்.

நஞ்சின்வ்யாபாரம் (ரு) "ஆக்கைவிடும்பொழுதெண்ணே" என்றும், (௬) "இந்தவுடம்போடினியிருக்கப்போகாது" என்றும் சொல்லுகிறபடியே இதுத்யாஜ்யமென்னும் ப்ரதிபத்தியுண்டாய், அத்தைக்கழித்துக்கொள்ளவேணுமென்றிருக்கும் ஜ்ஞாநவிஶேஷயுக்தர்க்கு "இங்ஙனேயாகிலும் இவ்விரோதி இவனுக்குக்கழியப்பெற்றதிறே" என்று உகக்கைக்கு உறுப்பாய்க்கொண்டு அபிமதமாயிருக்கும்.

இவன்வ்யாபாரம் (எ) "உயிர்மாய்தல் கண்டாற்றேன்"

(க) (உ) ஞானஸாரம். (ங) வி-பு-௬. (ச) திருவி-க.
(ரு) தி-வாய்-க-உ-௯. (௬) (எ) தி-வாய்-௪-௯-௩.

என்றும் (க) "உலகினதியல்வே" என்றும் சொல்லுகிறபடியே ஆண்டாளுக்கு வீரஸுந்தரன்செயல் அநபிமதமானவோபாதி, அவர்கள் நோவுபாட்டுக்கும் ஸ்வோத்கர்ஷத்துக்கும் வெறுப்புக்கு முறுப்பாய்க்கொண்டு அநபிமதமாயிருக்கும், ஆசார்ய விஷயீகாரத்தைப்பெற்றும் இவனிப்படித் தன்னைத்தானே முடிப்பானொருவனாகையாலே அஸத்ப்ராயனென்றும், அத்ரஷ்டவ்யனென்றும் நினைத்துப் படர்க்கையாக "அது" என்கிறார்.

உம்மைப்போல் மற்றையாராகிலும் இங்ஙன்சொன்னாருண்டோவென்ன (ஈனமிலாரித்யாதி). நாமேயன்று; நமக்கு தேசிகராயிருப்பாரும் இவ்வர்த்தத்தைச் சொன்னாரென்கிறார். (என்றிவை ஈனமிலார்சொன்னார்) நஞ்சுதான் அநித்யமான ஶரீரத்தைமுடிக்கும்; ஆசார்யன்பக்கல் ப்ரேமமில்லாதவன் நித்யமான ஆத்மவஸ்துவை முடிக்குமென்கிற இவ்வர்த்தத்தை ஸ்வாசார்யன் பக்கல் ப்ரேமமற்றிருக்கையாகிற தாழ்வில்லாத நம் பூர்வாசார்யர்கள், (உ) "విద్యాధరతో ప్యతిజనస్సః ఖలఙతి నమ్రతావద్వి ద్వాంసః - యాదయం సకులద్వేషీ సకులద్వేషీ పునః పిశునః - விஷதரதோப்யதிவிஷம: கலஇதிநம்ருஷாவதந்திவித்வாம்ஸ: | யதயம்நகுலத்வேஷீ ஸகுலத்வேஷிபுந: பிஶுந:" என்று லௌகிகர் விஷயமாக அபியுக்தர்சொன்னவோபாதி தந்தம்மைப்பற்றியிருக்குமவர்களைப்பார்த்துத் தாம்தாம் ஓருக்திகளாலே விஶததமமாகச் சொன்னார்கள்.

ஆசார்யவிஷயத்தில் ப்ரேமமற்றிருக்குமதிற்காட்டில் நிஹீநதையில்லையென்றும், இதிருக்குமதிற்காட்டில்வேறே உத்கர்ஷமில்லையென்றும் திருவுள்ளம்பற்றி "ஈனமிலார்" என்கிறார்காணும். (சொன்னார்) அவர்கள் கரணத்ரயஸாரூப்யமுடையராயிருப்பார் சிலரிறே. (சொன்னாரிவை) (ங) "యద్వచస్సకలం శాస్త్రమ్- யத்வசஸ்ஸகலம் ஶாஸ்த்ரம்" என்றும (ச) "శ్రీర్దాస్యమపి యస్య ప్రహ్వాయస్య ధర్మః పర మాయతః-க்ரீடார்த்தமபியத்ப்ரூயுஸ்ஸதர்ம: பரமோமத:" என்றும் சொல்லும்படிகாணும் அவர்கள் திவ்யஸூக்தியின் மெய்ப்பாடிருப்பது. (உ)

---

(க) திருவாசிரியம். (உ) வாஸவதத்தா (ங) (ச)

௩.—பார்த்தகுருவினளவில் பரிவின்றி
சீர்த்தமிகு ஞானமெல்லாம்சேர்ந்தாலும்-கார்த்தகட
மண்ணின்மேல் தன்புற்றமங்குமே தேங்காமல் [ல்
நண்ணுமேகிழாநரகு. (௩)

அவ;—மூன்றும்பாட்டு. ஸ்வாசார்யன்பக்கல்ப்ரேம மற்றிருந்தானேயாகிலும் அவனுபதேசத்தாலே அர்த்தபஞ்சகம் முதலாகத் தாத்பர்யங்களோடினது, ஞானக்கலைகளான அவ்வவ சாஸ்த்ரங்களைப் பரக்கக்கற்று, அத்தால்பிறந்த ஜ்ஞாநவிசேஷத்தாலே இவனுக்கீடேறக் குறையென்னென்ன; அந்தப்ரேமமின்றிக்கே யுண்டாயிருக்கிற ஜ்ஞாநவிசேஷமானது (க) "శ్రుతంతస్యసర్వం కుంజరశౌచవత్ - ச்ருதம்தஸ்யஸர்வம் குஞ்ஜரசௌசவத்"என்கிறபடியே கஜஸ்நாநத்தோபாதி நிரர்த்தகமாயிருப்பதொன்றுகையாலே; ஆதலால், (௨) "நண்ணுரவர்கள் திருநாடு" என்னும்படி அதப்பதநமொன்றுமேகாணும் இவர்களுக்குப் பலித்துவிடுவதென்கிறுர்.

வ்யா;—(பார்த்தவித்யாதி) (பார்த்தகுருவினளவில்) * எதிர்சூழல் புக்குத்திரிகிற ஸர்வேச்வரனுங்கூட ஆத்தனையும்பார்த்து "இனிநம்மாலாகாது" என்று கைவாங்கிக்கண்ணநீரோடே மீளும்படியான தன்னை(௩) "பலமொன்றும் காணமைகாணும் கருத்தர்" என்கிறபடியே, க்யாதிலாபபூஜைகளில் கண்வையாதே உஜ்ஜீவநஹேதுவாய்க்கொண்டு நிர்ஹேதுமாகக் கடாக்ஷித்தருளி (ச) "అజ్ఞానతిమిరాంధస్య జ్ఞానాంజనశలాకయా । చక్షురున్మీలితంయేన - அஜ்ஞாநதிமிராந்தஸ்ய ஜ்ஞாநாஞ்ஜநசலாகயா| சக்ஷுருந்மீலிதம்யேந" என்கிறபடியே அஜ்ஞாநாந்தகாரத்தை வாஸனையோடே போக்கவற்றுனஜ்ஞாநத்தை யுபதேசித்து இப்புடைகளிலே மஹோபகாரகனை ஆசார்யன் பக்கலிலே,

(பரிவின்றி) (௨)"தன்குருவின் தாளிணைகள் தன்னிலன்பொன்றில்லாதார்" என்கிறபடியே இம்மஹோபகாரத்துக்குத் தோற்று, (ரு) "உனக்கென்செய்கேன்" என்றுபரிவர், (௬) " ಶೇಷಃ

(க) (௨) உபதேசரத்தினமாலை. (௩) ஞானஸாரம்.
(ச) (ரு) (௬)

ஶ்ரீநிதேவத்யே-ஶிமிவஶ்ரீகிதே வித்யதேமே" என்று சொல்லும்படி "இவ்விஷயத்திலே அகிஞ்சநனானநான் எத்தைச்செய்வது" என்றுநெஞ்சாறல்பட்டுக் கிஞ்சித்காரத்திலேமீளும்படி பண்ணக்கடவதானப்ரேம மின்றிக்கேயிருப்பான்; பரிவாவது- பக்ஷபாதம்; இத்தால்-ப்ரேமத்தைநினைக்கிறது. (க) "భూయోనాథే మమతత్పార్థతా మే భూయః - பூயோநாதே மமது ஸததாவர்த்ததாமேஷபூயः" என்று அளவுடையார் ஆசார்யவிஷயத்திலே ஆஸாவிக்கிறப்ரேமத்தைக்காணும் இவன் பண்ணுதொழிகிறது.

ப்ரேமமின்றியிலே யொழிந்தாலும் இவன் தன்னுடைய ஜ்ஞாநவிஶேஷத்தாலே உஜ்ஜீவிக்கக் குறை யென்னென்ன (சீர்த்தவித்யாதி) (உ) "తజ్ఞానమ్-தத்ஜ்ஞாநம்" என்றும், (ச) "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றும் சொல்லுகிறபடியே ஶ்ரிய: பதியானஸர்வேஶ்வரனை யுள்ளபடி யறிவிக்கப்பெறுகையாலே கனத்திருப்பதாய், (ந) "సర్వజ్ఞానసర్వస్వం పవిత్రమిదముత్తమం-நஹிஜ்ஞாநேநஸத்ருஶம்பவித்ரமிஹவித்யதே" என்னும்படி ஶ்லாக்யதரமாயிருந்துள்ள ஜ்ஞாநமெல்லாம் தன்னிடத்திலே கூடுபூரித்துக்கிடந்தாலும்; (ரு) "అర్థపంచకజ్ఞానం-அர்த்தேநைவவிஶேஷோ ஹி நிராகாரதயாதியாம்" என்கிறபடியேதத்த்வவிஷயமான ஜ்ஞாநத்துக்கு-விஷயபேதா(भेदा)யத்தமான ஸ்வரூபபேதமுண்டாகையாலே "ஞானமெல்லாம்சேர்ந்தாலும்" என்கிறார். "சேர்ந்தாலும்" என்று யத்யா(द्या)லிங்கிதமாகச் சொல்லுகையாலே தத்தத்ஶாஸ்த்ரஜந்யமானஜ்ஞாநமானது, (கா) "అజ్ఞానాదాత్మనోనిత్యం... - ஆத்மநோநாத்மகல்பஸ்ய ஸ்வாத்மேஶாநஸ்யயோக்யதாம் | க்ருதவந்தம்நயோவேத்தி க்ருதக்நோநாஸ்திதத்ஸம:" என்னும்படி ஸ்வாசார்யவிஷயத்தில் க்ருதஜ்ஞதையின்றிக்கே க்ருதக்நனானவனுக்கு ஒருகாலும் உண்டாகாது. உண்டானாலும் கார்யகரமன் றென்றுமிடம் தோன்றுகிறது.

---

(க) (உ) வி-பு-கூ-ரு-அ௯. (ந) க-திருவ-௯௱
(ச) கீதை- (ரு) (கா)

கார்யகரமாகாதபடி யென்னனேயென்ன (கார்த்தவித்யாதி) அந்தஜ்ஞாநத்தைப்பெற்றும் அவன் அதம்பதிக்கையாலேயென்கிறார் (கார்த்தகடல்மண்ணின்மேல் தான்புற்றுமங்குமே) எவம்பூதனானவிவன் (க) "ஸாகரமேகலாம்" என்கிறபடியே நீர்ச்செறிவாலே கார்போலேகறுத்துத்தோற்றுகிற கடலாலேசூழப்பட்ட இந்தபூமியிலேதானே (உ) "அத்யுத்கடை:புண்யபாபைரிஹைவ பலமச்நுதே" என்கிறபடியே (௩) "இங்கேகாணவிப்பிறப்பே மகிழ்வர்" என்கிறதுக்கு எதிர்த்தட்டாக ஐஹிகத்திலேதானே அனைவரும் நேராகக்காணும்படி, இனி இதுக்கவ்வருகில்லையென்னும்படியான நிரவதிகதுக்கத்தை யநுபவித்து (ச) "க்லேசாநுத்க்ராந்திமாப் நோதி யாம்யகிங்கரபீடித:" என்கிறபடியே உத்க்ரமணதசையில் யமதூதராலே இழுப்புண்டு ம்ருத்யுபரவசனாய்நசிக்கும்.

"கார்த்தகடல்" என்கிறவிடத்தில் "த" என்பதுசாரியைச்சொல்லாய், கார்க்கடலென்றபடி. (தான்புற்று) இவனநுபவிக்கிற ஆத்யாத்மிகாதி துக்கங்கள்தான், (நி) "எண்ணாராத்துயர்" என்னும்படி அலெக்க்யாதங்களாயிருக்கையாலே அவற்றைத்தனித்தனியே பரிகணித்துச்சொல்லில் பணிப்படுமென்று, ப்ரயோஜகத்தாலே சொல்லுகிறார் (மங்குமே) மங்குதல் - நசித்தல். அவன் நசிப்பனோநசியானோ வென்றுபயம் வேண்டா; நசித்துவிடுவனென்கிறார்.

இவனிப்படி ஐஹிகத்தில் துக்கித்தானேயாகிலும் ஆமுஷ்மிகத்தில் ஸுகித்திருப்பனோவென்ன; (தேங்காமலித்யாதி) அவ்விடத்திலும் இவன்ஸுகித்திரானென்கிறார் (தேங்காமல்நண்ணுமே மீளாமநரகு) இங்ஙன் மங்கினவிவன் யமலோகத்திலே சென்றுயாதநாசரீரத்தைப்பரிக்ரஹித்து (கூ) "இன்பமில்வெந்நரகாகி" என்கிறபடியே ஸுகமிச்ரமின்றிக்கே நிக்ருஷ்டதுக்கமேயானநரகத்தைஸர்வகாலமும் இடைவிடாமல் அநுபவித்துக் கொ

(க) (உ) (௩) தி-வாய்-அ-மு-கக.
(ச) வி-பு-கூ- (நி) தி-வாய்-ச-கூ-க. (கூ) தி-வாய் ௩-கூ-எ.

ண்டு போரக்கடவன். அன்றிக்கே, தான்புற்று மங்கினவிவனுக்குக்கரையேற்ற முண்டோவென்ன, (தேங்காமலித்யாதி) ஒருகாலும் ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் நின்று கரையேற்றமில்லையென்கிறார்.

(தேங்காமல் நண்ணுமெகிழாம்நரகு) இவளிப்புடைகளிலே தான்புற்று மங்கினவநந்தரம் யமலோகத்திலே சென்று, யாதநா ஶரீரத்தை ப்பரிக்ரஹித்து நரகாநுபவம் பண்ணுவது.

(௧) అథైతమేవాధ్వానం పునర్నివర్తన్తే, యథేతమాకాశమ్, ఆకాశాద్వాయుమ్, వాయుర్భూత్వాధూమోభవతి, ధూమోభూత్వా అభ్రంభవతి, అభ్రం భూత్వా మేఘోభవతి, మేఘోభూత్వాప్రవర్షతి – அதைத் தமேவாத்வாநம் புநர்நிவர்த்தந்தே, அதைதமாகாஶம், ஆகஶாத்வாயும், வாயுர்பூத்வா தூமோபவதி, தூமோபூத்வா அப்ரம்பவதி, அப்ரம்பூத்வா மேகோபவதி, மேகோபூத்வாப்ரவர்ஷதி" இத்யாதியாலே பஞ்சாக்நிவித்யையிற் சொல்லுகிறபடியே இச்சரீரத்தைப்பொகட்டு ஸூக்ஷ்மஶரீரத்தோடே நிராலம்பநமான வாகாஶத்திலே ஸஞ்சரிப்பது. ஆதித்யன்தன் கிரணங்களாலே உபாத்தமான ஹிமத்தாலே ஆகாஶத்திலே மங்கிக்கிடக்கிற தன்னைமேகத்திலே புகுரவிட, அதுதன்னில் புக்கிருப்பது. அந்தஜலம் ஸஸ்யத்துக்கு ஆதாரமாய்ப்புகுமளவிலே தத்த்வாராஸஸ்யத்திலேபுகுவது. அந்தஸஸ்யம் பக்வமாய், அந்நமாய்ப்பரிணமிக்குமளவில் தத்த்வாரா புருஷஶரீரத்திலே புகுவது; அந்த அந்நமானது ஶுக்லமாய்ப் பரிணமிக்குமளவிலே ஶுக்லத்வாரா ஸ்த்ரீஶரீரத்திலே ப்ரவேஶிப்பது, பின்புகர்ப்ப(ர்ப)மாய்ப் பரிணமிப்பது. அங்கேகிடக்கும்போது மாத்ருபோஜநாந்தர்ப்பூதங்களான தீக்ஷ்ணோஷ்ணத்ரவ்யங்களாலே துடரவிட்டஈயம்போலே துடிப்பது. இந்தக்லேஶத்தோடே கர்ப்பதும்பமாகிற பையிலேகட்டுண்டு அவயவங்களை நீட்டவும் மாட்டாதேகிடப்பது. க்லேஶத்தோடே மாத்ருகர்ப்பத்தில் நின்றும் நிஷ்க்ரமிப்பது.

பால்யதஶையில் அஶுசிப்ரஸ்தரங்களிலே வஸிப்பது. ஸ்வாதந்த்ர்யேண ஒருப்ரவ்ருத்தியும்பண்ணக்ஷமனன்றிக்

---

(௧) சாந்தோ-

மூ,—தன்னையிறையைத் தடையைச்சரணெறியை
மன்னுபெருவாழ்வையொருமந்திரத்தி—னின்னருளா
அஞ்சிலுங்கேட்டவளித்தவன்பாலன்பிலார் [ல்
நஞ்சிலும்தீகடென்றிருப்பன் நான். (௪)

கே யொழிவது, பின்னையுமிகவயோடே காலத்தைப்போக்கு வது. யௌவநத்தில் நரகஹேதுவான விஷயாந்தரங்களையே விரும்புவது. காலத்ரயத்திலும் கரணத்ரயத்தாலும் துஷ்கர்மங் களையே ஆசரிப்பது. ஆபாத்ரயத்தாலே அலமாவது, தாபத் ரயத்தாலே தப்தனுவது, ஈஷணாத்ரயத்தாலே ஈடுபடுவது. அப ராதத்ரயத்தை ஆர்ஜிப்பது; ஜரையிலே அபாக்தனுய்க்கொண்டு மிகவும்தளருவது, நினைவின்றிக்கே மரணத்தைப்ராபிப்பது; பின்னை உத்க்ரமணக்லேசத்தை யநுபவிப்பது. புநஸ்ச, ம்ருத் யுபரவசனுய்க்கொண்டு, (க) "మరణం జననం జన్మమరణాయైవ కేవలమ్- மரணம் ஜநநம் ஜந்மமரணயைவகேவலம" என்கிறபடியே இப் படி யிடைவிடாதே நடந்துசெல்லுகிற ஸம்ஸாரமாகிற *விடியா வெந்நரகத்திலேயழுந்தி ஒருநாளும் கரையேற்றமின்றிக்கே நித்யஸம்ஸாரியாய்ப் போரக்கடவன்.

(கீழாம்நரகு) (உ) "கீனிரயம்" என்கிறபடியே ஒருகாலவி சேஷத்திலே கரையேற்றமுடைத்தான யமன்தண்டலாதிற நர கம் போலன்றிக்கே, ஒருகாலவிசேஷத்திலும் கரையேற்றமில் லாதபடி நெடுகச்செல்லாநிற்கிற நரகமிறே இஸ்ஸம்ஸாரம்.(நண் ணுமே கீழாம்நரகு) ஏவம்பூதமான விந்நரகத்தைக்கடக்கப் பெ ருதேயாவதாத்மபாவியாக அழுந்தியிருப்பன். (௩)

அவ;—நாலாம்பாட்டு. பின்னையும் ஸிம்ஹாவலோகநந் யாயேந இரண்டாம்பாட்டைக் கடாக்ஷித்தருளி, அதிலேநிர்தே ஸித்த அஞ்சுபொருள் தானின்னதென்றும, அதுதான் இவ்விட த்திலே ப்ரதிபாதிக்கப்பட்டதென்று மருளிச்செய்யாநின்று கொண்டு, ஏவம்பூதமான இவ்வர்த்தபஞ்சகத்தைத் தன்னுடைய பரமக்ருபையாலே உபதேஸித்த ஆசார்யன்பக்கலிலே ப்ரேம மற்றிருக்குமவன் விஷத்திலுங்காட்டில் அதிக்ரூரனென்கிருர்.

(க) (உ) ஞானஸாரம்.

வ்யா;—(தன்னையித்யாதி) ஆகாரத்தில் பௌநருக்த்யம் அலங்க்ருதியாயிருக்கும் போலேகாணும். "தன்னையிறையை" இத்யாதிகளில் த்விதீயையை ப்ரதமையாக்கி, "திருமந்த்ரப்ரதிபாத்யமாயிருந்துள்ள ஸ்வஸ்வரூபாதிகளாகிற ஐந்திலும் கேடோட விளித்தவன்" என்றந்வயிக்கவுமாம். அன்றிக்கே, "மந்திரத்தினைந்திலும் வைத்துக்கொண்டு, தன்னையிறையைத் தடையைச்சரணெறியை மன்னுபெருவாழ்வை - கேடோடவளித்தவன்" என்றந்வயிக்கவுமாம.

(௧) "யஸ்யாஸ்மி - யஸ்யாஸ்மி" இத்யாதிகளையுட்கொண்டு பரஸ்வரூபம் முன்னாக அர்த்தபஞ்சகத்தை நிர்தேசித்தார் முதற்பாட்டில்; பிள்ளையருளிச்செய்த அர்த்தபஞ்சக ரஹஸ்யத்தையுட்கொண்டு ஸ்வஸ்வரூபம் முன்னாக அர்த்தபஞ்சகத்தை நிர்த்தேசிக்கிறார் இதில்.

(தன்னை) திருமந்த்ரத்தில் ப்ரதமபதமான ப்ரணவத்தில் பகவச்சேஷத்வாஶ்ரயமாக மகாரத்தாலே ப்ரதிபாதிக்கப்படுகிறதானும். (இறையை) தனக்கு வகுத்தசேஷியாக ப்ரதிபாதிக்கப்படுகிற அகாரவாச்யனான வெம்பெருமானும். (தடையை) தானவனைப்பற்றுமிடத்தில் இடைச்சுவராக த்விதீயபதமான நமஸ்ஸில் ஷஷ்ட்யந்தமகாரோக்தமான விரோதியும். (சரணெறியை) அப்படியேதான் அவனைப்பெறுகைக்கு நிரபாயோபாயமாக அகண்ட(ஷஷ்)நமஃ பதோக்தமானஶரணாகதியும் (மன்னுபெருவாழ்வை) இஶ்ஶரணாகதிலப்யமான ஸவிபக்திகநாராயணபதோக்தமான கைங்கர்யமாகிற நித்யபுருஷார்த்தமும்.

(ஒருமந்திரத்தின்) இப்போதுபடும்துறை இது ஒன்றுமே போலேகாணும். மற்றைவ்யாபகத்வயத்துக்கும் இப்பேறுபாடில்லையிறே. (ஒரு) இவ்வர்த்தவிசேஷங்களைப்ரதிபாதிக்கக்கடவதாயும், ப்ரபந்நனாகிற ப்ரமாதாவுக்கு அர்ச்சாவதாரமாகிற ப்ரமேயத்தை யறிவிக்கும் ப்ரமாணமாயும், ஸர்வோபாயஶூந்யர்க்கு ஸர்வஸ்வம்மாயும். அந்தனுக்கும் அஶக்தனுக்கும் வைத்ததண்

(௧) யஜு-௨-அஷ்ட-

ஸர்ப்பந்தலாயும், ஸம்ஸாரவிஷதஷ்டனுக்கு ஸித்தௌஷதமாயும், அதநனுக்குநிதியாயும், எம்பெருமானைப்பற்றுமதிகாரிக்கு மங்களஸூத்ரமாயும், ஒருபாகவதரியமநத்தை வெறுத்தல் மறுத்தல் செய்யாதே அநுபோக்யமென்றிருக்கையாகிற பலஜ்ஞாநத்தை யுண்டாக்கக்கடவதாயும், தனக்குப்ராப்தி அணித்தாயிருக்குமளவிலும் பகவத்விஷயத்தில் லபிநிவிஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டு தத்விஞ்ஞித்யாரத்துக் குறுப்பாக இங்குத்தைநவாஸத்திலே ஒருப்படுகையன்றிறு பலயாதாத்ம்யஜ்ஞாநத்தை விளக்கக்கடவதாயும், "ஜ்ஞாநப்ரதன் ஆசார்யன்" என்னும் பிரமை ஜநிப்பிக்குமதாயும், ஜ்ஞாநவர்த்த(க்)கர் ஸ்ரீவைஷ்ணவர்களென்னும் ப்ரதிபத்தியைப் பிறப்பிக்குமதாயும், ஜ்ஞாநவிஷயம் எம்பெருமானென்னு முணர்வை யுண்டாக்குமதாயும், ஜ்ஞாநபலம் பகவதநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யமென்னும் தெளிவைக்கொடுக்குமதாயும், அக்கைங்கர்யத்துக்குச்சரமாவதி பாகவதகைங்கர்யமென்னும் ப்ரதிபத்தியைப் பிறப்பிக்குமதாயும் போருகையாலே (௧) "[illegible] - நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:" என்றும், (௨) "[illegible] - நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:" என்றும் சொல்லுகிறபடியே வாசகங்களில் தனக்கவ்வருகாயிருப்பதொன்றில்லாதபடி, தனக்குள் நின்றவஸ்துவைப்போலே அத்விதீயமாய்த்துப் பெரிய திருமந்த்ரந்தானிருப்பது.

(ஒருமந்த்ரத்தின்) "[illegible] - [illegible] - மந்தாரம் த்ராயத இதிமந்த்ர:" என்கிறபடியே தன்னை யநுஸந்திப்பாரரேனுமாகவுமாம், அவர்களுடைய இஷ்டப்ராபண பர்யந்தமாயும், அநிஷ்டநிவாரண பர்யந்தமாயுமிருந்துள்ள ரக்ஷணத்தைப் பண்ணுமதாகையாலே இத்தை மந்த்ரமென்கிறது.

இப்படி இவ்வர்த்தபஞ்சகத்தை உபதேசித்தது இத்தலையிலேதேனுமொரு நன்மைகண்டோவென்ன; (இன்னருளால்) அங்ஙனன்றிக்கே நிர்ஹேதுகமாக வென்கிறார். (இன்னருளால்) (௩) "பல்லாருளும்பழுது" என்னும்படியான ஈப்பாரநுடைய

(௧) நாரஸிம்ஹபு-௧௮. (௨) நாரதீய-௧-௪௧. (௩) ௧-திருவா-௩௰.

அருளிலும் அதிசயிதமாயிறே இவ்வருள்தானிருப்பது; அது - ஸ்வதந்த்ரமாயும், பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயுமிருக்கும் ; இவனுடையவருள் – பரதந்த்ரமாயும் மோக்ஷைகஹேதுபூதமாயுமிருக்கும். (இன்னருளால்) (க) "அருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே" என்கிறபடியே இத்தலையிலேதேனுமொருநன்மை யபேக்ஷியாத பரமக்ருபையாலே.

(அஞ்சிலும் கேட்டடவளித்தவன்) இம்மந்த்ரப்ரதிபாத்யமான அர்த்தபஞ்சகத்திலும் அஜ்ஞாநஸம்ஶய விபர்யயங்களறும்படி ஜ்ஞாநோபதேசம்பண்ணியருளின ஸதாசார்யன்பக்கலிலே.

அஞ்சிலும்கேடோட வளிக்கையாவது-மகாரவாச்யனான சேதநஸ்வரூபம்-ப்ரக்ருதே꞉ பரமாய், ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய், ஜ்ஞாநகுணகமாய், நித்யமாய், நிர்விகாரமாய், அணுவாய், ஏகரூபமாய், பகவதநந்யார்ஹ ஶேஷமாயிருக்குமென்றும்,

அகாரவாச்யனான பரஸ்வரூபம் - லக்ஷ்மீஸநாதமாய், ஸமஸ்த கல்யாணகுணாத்மகமாய், ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷணமாய், த்ரிவிதபரிச்சேத ரஹிதமாய், உபயவிபூதி நிர்வாஹகமாய், ஸர்வாபாஶ்ரயமாய், ஸர்வப்ரகாரத்தாலும் ரக்ஷகமாய் ஶேஷியாயிருக்குமென்றும்,

ஷஷ்ட்ட்யந்த மகாரோக்தமான விரோதிஸ்வரூபம் - தேஹாத்மாபிமாநரூபமாய், தேவதாந்தரபரத்வபுத்திவிலக்ஷணமாய், ப்ராபகாந்தரோபாயத்வ ப்ரதிபத்த்யாத்மகமாய், கைங்கர்ய ஸ்வார்த்ததாபுத்திரூபமாய், ப்ராரப்த (௨) ஶரீரஸம்பந்தாத்மகமாய், ஸம்ஸாரவர்த்த(ர்)கமாய், அஹங்கார மமகாரரூபமாய், அத்யந்தஹேயமாய், த்யாஜ்யமாயிருக்குமென்றும்,

அகண்டநம꞉பதோக்தமான உபாயஸ்வரூபம் - ஸித்தமாய் பரமசேதநமாய், ஸர்வஜ்ஞமாய், ஸர்வஶக்தியாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாய், ஸர்வபலப்ரதமாய், ப்ராப்தமாய், வ்யபிசார விளம்பவிதுரமாய், ஸ்வீகாரவிஷய பூதமாயிருக்குமென்றும்,

ஸவிபக்திகமான நாராயணபதோக்தமான புருஷார்த்த ஸ்வரூபம் - அநுபவஜநித ப்ரீதிகாரிதமாய், ஸர்வதேஶ ஸர்வ

---

(க) கண்ணி-அ.

கால ஸர்வாவஸ்தோசிதமாய், பரமப்ராப்யமாய்,பரார்த்ததைக வேஷமாய், ஸ்வரூபாநுரூபமாய், ஸ்வார்த்ததாகந்தரஹிதமாய், நிரதிஶயபோக்யமாய், யாவதாத்மபாவியா யிருக்குமென்றும் வெளியிடாநின்றுகொண்டு,

தேஹாத்மப்ரமம், ஸ்வதந்த்ராத்மப்ரமம், அந்யஶேஷத்வ ப்ரமம், பகவத்விஷயத்தி லஈஶ்வரத்வப்ரமம், தேவதாந்தரபரத்வப்ரமம், தத்ஸமத்வப்ரமம், அஹங்காரமமகாரா த்யுபாதேயத்வப்ரமம்,ப்ராரப்த(ஓ)ஶரீரஸ்ய அநிவர்த்யத்வப்ரமம், ததநுபந்திஷு பந்துத்வப்ரமம், ஸ்வீகாரோபாயத்வப்ரமம், கைங்கர்ய ஸ்வார்த்தத்வப்ரமம், தத்ஸ்வீகர்த்ருத்வப்ரமம் ப்ரப்ருதிகமான அஜ்ஞாநாஉந்யதாஜ்ஞாநாதிகளெல்லாம் வாஸனையோடேபோம்படி க்ருபைபண்ணுகை.

(அளித்தவன் பாலன்பிலார்) இப்படி உபதேஶித்த ஸ்வாசார்யன் விஷயத்திலே. (௧) "యస్య దేవే పరా భక్తిర్యథా దేవే తథా గురౌ- யஸ்யதேவே பராபக்திர்யதா தேவேததாகுரௌ" என்று அவஶ்யகர்த்தவ்யதயா விதிக்கப்பட்ட ப்ரேமமின்றிக்கே யிருக்குமவர்கள்.

இப்படி யிருந்துள்ள விவர்களை நீர்நினைத்திருப்ப தெங்ஙனேயென்ன (நஞ்சிலும் கேடென்றிருப்பன் நான்) நஞ்சுகேடு; இவர்கள் அதிலுங்கேடு, ஹேயமாய் நஶ்வரமான ஶரீரத்தை ஸ்வபக்ஷணத்தாலே முடிக்கவற்றான விஷத்திலுங்காட்டில், உபாதேயமாய் நித்யமான ஆத்மவஸ்துவை முடித்துக்கொள்ளுமவர்களாகையாலே (௨) "నాపక్రామతి సంసారాత్స ఖలు బ్రహ్మహా భవేత్- நாபக்ராமதி ஸம்ஸாராத்ஸகலுப்ரஹ்மஹாபவேத்" என்று மஹாபாதகியாகச்சொல்லப்படுகிற நித்யஸம்ஸாரியோபாதி அதிக்ரூரரென்று அறுதியிட்டாய்த்து நானிருப்பதென்கிறார்.

"இருப்பன்நான்" என்று ஸ்வப்ரதிபத்தி விஶேஷத்தை யருளிச்செய்கிறார் (இருப்பன்) இவ்விருப்பில் எனக்கொரு சலநமில்லை. இதுவேயாய்த்து யாத்ரை. (நான்) பிள்ளைலோகாசார்யருடைய விஷயீகாரத்தைப் பெற்றவெனக்கு இவ்விருப்பு வந்தேறியாயிராதிறே.

(௧) ஶ்வேதா-௬-௨௩. (௨)

மூ.—என்பக்கலோதினரென் றெனுமியல்வும்
என்பக்கல்நன்மையெனுமியல்வும்—மன்பக்கல்
சேவிப்பார்க்கன் புடையோர்சந்மநிரூபணமும்
ஆவிக்குநேரேயழுக்கு. (ரு)

ஆக, இம்மூன்றுபாட்டாலும், அதிகாரிநிஷ்டாக்ரம ப்ரகரணத்தில், "அஸஹ்யாபசாரமாவது -நிர்நிமித்தமாக பகவத் பாகவத விஷயமென்றால் அஸஹமாநனாயிருக்கையும், ஆசார்யாபசாரமும்" "ஆகையுண்டாகிலும் இழவுக்கு அவர்கள் பக்கல் அபசாரமேபோரும்; இவையொன்றுக்கொன்று க்ரூரங்களுமாய்" இத்யாதிகளிற் சொல்லுகிற அர்த்த விசேஷங்களை வெளியிட்டருளினாராயிற்று. (௪)

அவ;—அஞ்சாம்பாட்டு. இப்படி உபதேஶ்யனான ஶிஷ்யனுக்கு ஸ்வாசார்யவிஷயத்தில்ப்ரேமமற்றிருக்கைஸ்வரூபஹாநியானவோபாதி உபதேஷ்டாவான ஆசார்யனுக்குத் தன்னிடத்தில் தன்னை மாறுபடநினைக்கையாகிற ஆசார்யத்வப்ரதிபத்தியும், ஶிஷ்யனிடத்திலே ஶிஷ்யனாமாறுபடநினைக்கையாகிற ஸ்வஶிஷ்யத்வப்ரதிபத்தியும், அப்படியே ஸௌஹ்ருதாஸ்யத்தை யுடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்பக்கலிலே ஜந்மநிரூபணமும் ஸ்வஸ்வரூப ஹாநியாய் விடுமென்கிறார்.

வ்யா;—(என்பக்கலித்யாதி) (என்பக்கலோதினாரென் றெனுமியல்வும்) சிலர் தன்பக்கலிலே ஜ்ஞானோபதேசம் பண்ணுமளவில், "அறிவிலேன்" என்றும், "अज्ञोऽहम् - அஜ்ஞோஹம்" என்றும், "अज्ञानामग्रगण्यम् - அஜ்ஞாநாமக்ரகண்யமாய்" என்றும் சொல்லுகிறபடியே தன்னை அஜ்ஞரில்தலைவனாக நினைத்து, அவர்களும் தானும் "बोधयन्तः परस्परम् - போதயந்தஃ பரஸ்பரம் பண்ணினார்களாக ப்ரதிபத்திபண்ணியிராதே, "என்னிடத்தில் இன்னார் இன்னார் இவ்வர்த்தவிஶேஷங்களை அதிகரித்துப் போந்தார்களாகையாலே அவர்கள் எனக்கு ஶிஷ்யராயிருப்பார்கள்" என்று நினைத்திருக்கையிறே இந்த துஸ்ஸ்வபாவம்.

அவ்வளவேயோ? (என்பக்கல் நன்மையெனுமியல்வும்) அப்படியேதான்சிலர்க்கு ஜ்ஞானோபதேஶம் பண்ணுமளவில்

(௧) "என்முன்சொல்லும் மூவுருவா" என்றும், (௨) "[illegible] - ஶ்ரோத்ருணாம்ப்ரதமஃ - ஸ்வயம்" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாசார்யனை உபதேஷ்டாவாகவும், ஶ்ரோதாக்களில்தன்னை முந்தின ஶ்ரோதாவாகவும், ஸ்வோபதேஶ்யரைத் தனக்கு ஸப்ரஹ்மசாரிகளாகவும் ப்ரதிபத்திபண்ணியிராதே தன்னை இவர்களுக்கு உபதேஷ்டாவாகவும், அவர்கள் தனக்கு உபதேஶ்யராகவும் நினைத்து" நான் இன்னார்க்கு இன்னபடி அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணிக்கொண்டு போந்தேன்; ஆகையாலே, என்னிடத்தில் ஆசார்யத்வமாகிற நன்மையிராநின்றது:" என்று நினைத்திருக்கையாகிற இந்தஸ்வஸ்வபாவமும். இயல்வு - ஸ்வபாவம்.

இந்நினைவுடையவன் அஹங்காரதூஷிதனாகையாலே, (௩) "[illegible] - டாம்பிகம்க்ரோதிநம் மூர்க்கம்ஸதா ஹங்காரதூஷிதம்| த்யக்ததர்மஞ்ச விப்ரேந்த்ர குரும்ப்ராஜ்ஞோ ந கல்பயேத்" என்கிற வசநத்தின்படியே அவனை ஆசார்யனாக ப்ரதிபத்தி பண்ணவொண்ணாதிறே.

அவ்வளவேயோ? (மன்பக்கல்சேவிப்பார்க் கன்புடையோர் சன்மநிரூபணமும்) அப்படியே, (௪) "[illegible] - பதிம்விஶ்வஸ்ய" என்றும், (௫) "[illegible] - ஜகத்பதிம்" என்றும், (௬) "நாரணன் முழுவேழுலகுக்கும்நாதன்" என்றும், (௭) "இறைவா" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வஸ்வாமியான எம்பெருமான்பக்கலிலே (௮) "[illegible] - ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே| பஜஇத்யேஷ தாதுர்வைஸேவாயாம் பரிகீர்த்திதஃ" என்னும்படியாக ஸ்நேஹபூர்வகமாக நித்யஸேவைபண்ணுமவர்களுக்கு; (௯) "நடையாவுடைத் திருநாரணன் தொண்டர் தொண்டர்" என்கிறபடியே பரமஸ்நேஹிகளாய்க்கொண்டு அபேக்ஷ் பேக்ஷவ்ருத்திகளிலும் அந்விதராய் ஸஹஜதாஸ்ய[illegible]

(௧) தி-வாய் எ-௯-௨. (௨) [illegible] (௩) [illegible] (௪) ஹ[illegible]-௭-[illegible].
(௫) பார-ஆநு- (௬) தி-வாய்-௨-எ-௨. (௭) திருப்பா[illegible]
(௮) ஹலிங்க-[illegible]-௬௯, (௯) தி-வாய்-௩-௭-[illegible]

ராயிருந்துள்ள ஶ்ரீவைஷ்ணவர்களிடத்திலே, (க) "వైష్ణవోత్పత్తి చిన్తనమ్ । మాతృయోనిపరీక్షయాస్తుల్యమాహుర్మనీషిణః - வைஷ்ணவோத்பத்தி சிந்தநம்। மாத்ருயோநி பரீக்ஷாயாஸ்துல்ய மாஹுர்மநீஷிண:" என்றுமாத்ருயோநி பரீக்ஷையோடொக்க ஶாஸ்த்ரங்களால் சொல்லப்படுகிற ஜந்மநிரூபணமும்.

ஜந்மநிரூபணமாவது - ஜாதிநிரூபணம். இது - குற்றத்துக்கும் இழவுக்கு முபலக்ஷணம். (உ) "భగవద్భక్తిదీప్తాగ్ని దగ్ధదుర్జాతికల్బిషః - பகவத்பக்தி தீப்தாக்நி தக்த துர்ஜாதி கில்பிஷ:" இத்யாதிகளாலே தபஃப்ரபாவத்தாலே விஶ்வாமித்ரனுக்கு க்ஷத்ரியத்வம் நிவ்ருத்தமானுப்போலே பகவத்ப்ரஸாதத்தாலே துர்ஜாதி நிவ்ருத்தமாமென்று சொல்லுகையாலே அவர்கள்பக்கல் ஜந்மநிரூபணம் - அதஸ்மிம்ஸ்தத்புத்தியாயிறே யிருப்பது.

(அன்புடையோர்) "நிதியுடையோர்" என்னுமாபோலே. இதுக்குமேற்பட்டிருப்பதொரு ஸம்பத்தில்லையிறே. (அன்புடையோர் சந்மநிரூபணமுமாவிக்குநேரேயழுக்கு) மற்றையாரிடத்தில் ஜந்மநிரூபணம் யதாவஸ்த்தித வஸ்துவிஷயமாகையாலே அழுக்கன்றுபோலே காணும்.

(சன்மநிரூபணமுமாவிக்கு நேரேயழுக்கு) கீழ்ச்சொன்ன விரண்டும், தேஜோத்ரவ்யமான ஆத்மவஸ்துக்களுக்கு பாகவதாபசாரத்தில் முற்படப்பரிகணிதமான ஜந்மநிரூபணமானவிது நேரேயழுக்கு. அன்றியே ஸ்வாசார்ய விஷயத்திலன்பிலாமையும், (௩) "ఆత్మాజ్ఞానమయోమలః - ஆத்மாஜ்ஞாநமயோமல: " என்கிற ஆத்மவஸ்துக்களுக்கு இம்மூன்றும் நேரேஅழுக்கென்னவுமாம்; அங்ஙனுமன்றிக்கே, அஞ்சுபொருளிமளித்தவன்பாலன்பிலாமை நித்யமான ஆத்மவஸ்துவுக்கு நேர்கொடுநேர் நாஶகமானுப்போலே, என்பக்கலோதினு ரின்னுரெனுமியல்வு முதலானவிம்மூன்றும் ஆத்மாவுக்கு நேர்கொடுநேர் நாஶகமென்னவுமாம். (நேரேயழுக்கு) அஹங்காரார்த்த காமாதிகளைப்போலே ஸத்வாரகமாகவன்றியே அத்வாரகமாகவே அழுக்கு. "க்ரூரநிஷித்தம்" என்னும்படியிறே இவற்றின் கொடுமையிருப்பது.

(க) (உ) (௩) வி-பு-

மூ;—அழுக்கென்றிவை யறிந்தேனைம் பொனரங்கா
ஒழித்தருளாயுள்ளில்வினையை—பழிப்பிலா
வென்னாரியர்க்காக வெம்பெருமானார்க்காக
உன்னாருட்காசவுற்று. (௬)

ஆக, இப்பாட்டில், பூர்வார்த்தத்தாலே, ஆசார்யாநுவர்த்தந ப்ரகரணத்தில், “தன்னைமாருடி நினைக்கையாவது - தன்னை ஆசார்யனென்று நினைக்கை.” இத்யாதியாலும், “மநஸ்ஸுக்குத் தீமையாவது - ஸ்வகுணத்தையும் பகவத்பாகவத தோஷத்தையும் நினைக்கை” இத்யாதியாலும், “பாகவதாபசாரந்தான் அநேகவிதம். அதிலொன்று அவர்கள்பக்கல் ஜந்மநிரூபணம்.” இத்யாதியாலே கீழ்ப்ரகரணத்திலசொன்ன அர்த்தவிசேஷங்களை அருளிச்செய்தாராயிற்று. (ரு)

அவ;—ஆறும்பாட்டு. இப்படி ஆத்மநாசத்தை விளைக்கக் கடவ இந்நாலுமே யாத்ரையாயிருக்கிற இஸ்ஸம்ஸாரிகள் நடுவேவர்த்திக்கிற நீர் இங்ஙன் உபதேசிக்கும்படி இவற்றில் அகப்படாதே தப்பியிருந்தீரே’ என்று பெரியபெருமாள் உகந்தருளக்கண்டு, இவைநேரே யழுக்கென்றறிந்தேனேயாகிலும் இப்படி இவ்வறிவை அடிமண்டியோடே கழிக்கவற்றானஎன்னாந்தர தோஷத்தை எனக்கு அஜ்ஞாதஜ்ஞாபகரான பிள்ளைலோகாசார்யரையும் தேவர்க்கு அபிமதரான எம்பெருமானாரையும் தேவருடைய பரமக்ருபையையும் கடாக்ஷித்துப் போக்கியருளவேணுமென்று விண்ணப்பம் செய்கிறார்.

வ்யா;—(அழுக்கென்றித்யாதி) (இவை - அழுக்கென்றறிந்தேன்)கீழ்ச்சொன்னவை யடங்கலும் தேஜோத்ரவ்யமான ஆத்மவஸ்துவுக்கு நேரே அவத்யகரமென்னுமிடத்தை (க) “నారాయ ణోపి వికృతిం యాతి గురోః ప్రచ్యుతస్య దుర్బుద్ధేః-நாராயணோபிவிக்ருதிம் யாதிகுரோ: ப்ரச்யுதஸ்ய துர்ப்புத்தே:” இத்யாதிகளாலும், (உ) “என்றுமனைத்துயிர்க்கு மீரஞ்செய் நாரணனுமன்றும் தன்னாரியன்பாலன்பொழியில்” இத்யாதியான அருளாளப்பெருமாளெம்பெருமானார் திவ்யஸூக்திகளாலும், (ந)“தான்ஹிதோப

(க) (உ) ஞானஸாரம். (ந) ப்ரிவசா-

தேசம் பண்ணும்போது தன்னையும் ஶிஷ்யனையும் மாறாடி நினைக்கை க்ரூரமிஷித்தம்; பாகவதாபசாரந்தான் அநேகவிதம். அதிலே யொன்று அவர்கள்பக்கல் ஜந்மநிரூபணம்." இத்யாதியாலே பிள்ளைலோகாசார்யருடைய திவ்யஸூக்திகளாலும், (௧) "[illegible] - [illegible] - வைஷ்ணவோத்பத்தி சிந்தநம் | மாத்ருயோநிபரீக்ஷாயாஸ்துல்யம்" இத்யாதி வசனங்களாலும் ஸம்ஶயவிபர்யயங்களறும்படி விஶதமாகவும் ப்ரமேயதேஹஸ்ரமமாகவும் அறிந்தேன்.

இவற்றின் தோஷப்பரப்பைத் தனித்தனியே யெடுத்துச் சொல்லப்புக்கால் பணிப்படுமென்று ஸ்ரீப்ரயோஜகத்திலே இழிகிறார் (அம்பொனரங்கா) நான் இவ்வறிவைப் பெறும்படி, அழகியதாயும் மநோஜ்ஞமாயும் பாவநமாயுமிருந்துள்ள திருவரங்கப் பெருநகரிலே ஸ்தாவரப்ரதிஷ்டையாகவிருந்து க்ருஷிபண்ணினவர் தேவரீரன்றோ. (அம்பொனரங்கா) நான் இவ்வறிவைப் பெற்றபின்பிறே (௨) "தூயராய்ச்சுடரடி" என்னும்படி தேவரீர்க்கு இவ்வழகும் இம்மநோஜ்ஞதையும் நிறம்பெற்றது. இவர்தான் திருவநந்தபுரத்திலே யெழுந்தருளியிருந்து இப்ப்ரபந்தத்தை யிட்டருளினாரேயாகிலும் உருவு வெளிப்பாட்டின் மிகுதியாலே "அரங்கா" என்று ஸம்போதிக்கும்படி பெரியபெருமாள் இவர்க்கு முன்னிலையாய்த் தோற்றுகிறார் போலேகாணும்.

(அம்பொனரங்கா ஒழித்தருளாய் உள்ளில்வினையை) தேவரீருடைய பாவநத்வத்துக்கும் தேவரீரைப்பற்றின வென்னுடைய அஶுத்திக்கும் * [illegible] - அக்நியின்சேத்போலே என்ன சேர்த்தியுண்டு; (௩) "தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்குத் தம்மையே யொக்கவருள் செய்வர்" என்று தத்வதர்ஶிகள் சொன்னபாசுரம் மநோ(ஶ)கவர்ஜமாயிருப்பதொன்றோ? (௪) "செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப்பெருவார்த்தை" என்னும்படி கையும் உழவுகோலும் பிடித்த சிறுவாய்க்கயிறுமான ஸாரத்யவேஷத்தோடே திருத்தேர்த்தட்டிலே யெழுந்தருளியிருந்து ஸ்வாஶ்ரிதனான வர்ஜுநனை வ்யாஜீகரித்து (௫) "[illegible] - ஸர்வபாபேப்யோ

(௧) (௨) தி-வாய்-௧-௧-௧. (௩) இ-மொ-௧௧-௩-௫. (௪) நா-தி-௧௧-௰.
(௫) கீ-௧௮-௬௬. ஸ்ரீப்ரயோஜகத்திலே யருளிச்செய்கிறார்.

மோக்ஷயிஷ்யாமி" என்று தேவர் சொன்னவார்த்தை அர்த்த ஸ்பர்ஸியா யிருப்பதொன்றன்றே? (க) "అనృతం నోక్తపూర్వం మే - அந்ருதம் நோக்தபூர்வம் மே" என்றும் (உ) "న మే మోఘం వచో భవేత్ - நமேமோகம் வசோபவேத்" என்றும் தேவர்தாமே யருளிச் செய்கையாலே தேவரீர்க்கு அந்ருதத்தில் வ்யுத்பத்தியில்லை.

(ஒழித்தருளாய்) இத்தலை அர்த்தியாதிருக்க, பூர்வஜராய்க் கொண்டு செய்யக்கடவ தேவரீர்க்கு இத்தலை அர்த்தித்தால் ஆறியிருக்கப்போமோ?

(அரங்காவொழித்தருளாய்) பயிர்த்தலையில் குடியிருப்பாரோபாதி இத்தலையைக் * காக்கக்குமியல்வனராய், அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதிக்கையன்றிக்கே நித்யஸந்நிதி பண்ணிக் கொண்டுபோருகிற தேவரீருக்கு இது$ தக்கோர்மையோ, (அருளாய்) நிர்க்க்ருணர் செய்யுமது அருளாளியான தேவரீர்க்குப் போருமோ.

(உள்ளில்வினையை) உண்பார்மிடற்றைப் பிடிக்குமவனைப் போலே (௩) "மனனகமலம்" என்னும்படி ஜ்ஞாநப்ரஸரணத்வாரத்தைபற்றியிறே இவ்வினைதானிருப்பது. (உள்ளில்வினையை) (ச) "உள்ளத்தேயுறையும்மாலை" என்கிறபடியே உள்ளேபதிகிடந்து ஸத்தையை நோக்குகிற தேவரீர்க்கு உள்ளிலுண்டான விரோதியைப்போக்குகை பெரும்பணியோ;

(ஒழித்தருளாயுள்ளில்வினையை) பாசியானது தெளிந்த ஜலத்தை யெங்குமொக்க வ்யாபரித்தாப்போலே இப்படிப்புக்குத்திரோதா(ந)யகமாய்க்கொண்டு உள்ளே பிணையுண்டிருக்கிற பாபத்தைப் போக்கியருளீர்.

"நீர் ஒழித்தருளாய்" என்று இங்ஙன் உறைப்புத்தோற்றச் சொல்லுகிறதென் கொண்டென்ன (பழிப்பிலாவித்யாதி) தேவரீர்க்கு அபிமதராயிருப்பாரையும் தேவரீருடைய தகவையும் அண்டைகொண்டுகாணும் நான் இவ்வார்த்தை சொல்லுகிறதென்கிறார். (பழிப்பிலாவென்னரியர்க்காக) கீழ்ச்சொன்ன குற்றங்களொன்றுமின்றிக்கேயிருந்துவைத்து ஸ்வோபதேஸ

(க) ரா-கி-எ-உஉ. (உ) பார- (௩) தி-வாய்-க-க-உ.
(ச) திருமாலை-௩ச. $ தகாதொன்றோ.

முகத்தாலே, இவை யட்ங்கலுமாகாதென்று மறிவிலேனை யெனக்கறிவித்த பிள்ளைலோகாசார்யருக்காகவும், இப்பழிப்புத் தான் சிலநாளுண்டாய்க் கழிந்ததில்லாமையாலே ததத்யந்தாபாவம்தோற்ற "பழிப்பிலா" என்கிறார்.

(எல்லாரியன்) (க) "[Telugu-script text] - குரும்வாயோபி மந்யதே" என்கிற ஸ்வீகாரம்போன்ற ஸ்வீகாரமன்று. அவ்வளவேயோ, (எம்பெருமானாருக்காக) அதுக்குமேலே அவர்க்குப் பரமஶேஷியாய் தேவரீர்க்கு அத்யந்தாபிமதராய் ஆசார்யபதத்துக்கு எல்லைநிலமாய், சரமார்த்தத்தை அனைவர்க்கும் தூ(ஞா)னிதாநம் பண்ணியருளின எம்பெருமானார்க்காகவும்.

அவ்வளவேயோ? (உன்னாருட்காக) அதுக்குமேலே தேவரீர்க்கு அஸாதாரண நிரூபகமாய், மற்றைகுணங்களுக்கு அதிஶயாதா (டு) யகமானவளவிலே அகஞ்சுரிப்பட்டிராதே என்னளவிலேயாய்க்கொண்டு கரைகட்டாக்கா வேரிபோலே கரைபுரண்டிருக்கிற க்ருபாகுணத்துக்காகவும், உன்றன் ரக்ஷண ஶக்தியிலேவந்தால் தேவரையும் விஞ்சிக்காணும் தேவரீருடைய க்ருபையிருப்பது. விரோதியில்(ஷ்)பீதியாலும், தந்நிவ்ருத்தியிலுண்டான த்வரையாலும், அந்தரங்கரைமுன்னிடில் பலம சடக்கெனக்கைபுகுருமென்கிறத்வரையாலும் இங்ஙன்சொல்லுகிறார்.

(உற்று)(உ)"[Telugu-script text] -குருவரம் வரதம் விதந்மே" என்றும்,(ந)"[Telugu-script text]-ராமாநுஜாங்க்ரி ஶரணோஸ்மி" என்றும்,(ச) "[Telugu-script text]-பிதாமஹம் நாதமுநிம்விலோக்ய" என்றும், (ரு) "என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்னும் சொல்லுகிறபடியே ஏவம் பூதரான விவர்களுக்காகவும் அடியேனை அங்கீகரித்தருளி என்னுடைய உள்ளில்வினையை யொழித்தருளவேணும். அல்லாவிடில் தேவரீர்க்கு ஆஶ்ரிதபாரதந்த்ர்யமும் க்ருபாபாரதந்த்ர்யமும் குலையுமிறே; என்னைப்பார்த்துச் செய்தருளுவதாக நினைத்திருந்தவன்றிறே தேவரீர்க்குக் காலக்கழிவு செய்யலாவது.

---

(க) (உ) வரவரமுநிஶ (ந) வரதராஜஸ்த.
(ச) ஸ்தோத்ரரத்ந (ரு) தி-வாய்-க-ச-எ.

மூ.—தீங்கேதுமில்லாத் தேசிகன்றன்சிந்தைக்குப்
பாங்காகநேரே பரிவுடையோர்—ஓங்காரத்
தேரின்மேலேறிச் செழுங்கதிரினூடுபோய்ச்
சேருவரேயந்தாமந்தான். (எ)

ஸப்தகாதை முற்றிற்று.

---

ஆக, இப்பாட்டால் பகவந்நிர்ஹேதுக க்ருபாப்ரபாவப்ரகரணத்தில் "பேற்றுக்கடி க்ருபை" இத்யாதியாலும், க்ருபை பெருகப்புக்கால் இருவருடைய ஸ்வாதந்த்ரயத்தாலும் தகையவொண்ணாதபடி யிருகரையுமழியப்பெருகும்" இத்யாதியாலும் சொல்லுகிற அர்த்தவிசேஷங்களையருளிச்செய்தாராய்த்து. (ச)

அவ;—ஏழாமபாட்டு. பலபடியாலும் ஆசார்யன்பக்கல் ப்ரேமமில்லாதவனுக்கு அதஃபதநமொழிய உஜ்ஜீவநமில்லையென்று சொல்லாநின்றீர்; ஆசார்யப்ரேமம் கனத்திருக்குமவனுக்கு உஜ்ஜீவநமுண்டோவென்ன, (க) "தாளிணையை வைத்தவவரை நீதியால் வந்திப்பார்க்குண்டிழியாவான்" என்று தத்வதர்ஶிகளாயிருப்பாரும் அறுதியிட்டார்களாகையாலே இப்படி யிருக்குமவனுக்கு உஜ்ஜீவநமுண்டென்று சொல்லாநின்றுகொண்டு இப்ப்ரபந்தத்தை நிகமித்தருளுகிறார்.

வ்யா;-(தீங்கேதுமில்லாத்தேசிகன்தன் சிந்தைக்கு)(க)"தப்பில்குருவருளால்" என்றும்,(உ)"தாழ்வாதுமில்குரவர்" என்றும், (ங) "కామక్రోధవివర్జితమ్ -- காமக்ரோத விவர்ஜிதம்" என்றும், (ச) "అనఘమ్-அநகம்" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாசார்யன்பக்கல் ப்ரேமமற்றிருக்கையாதல், தன்பக்கலிலே சிலமினுக்கங்களை நினைத்திருக்கையாதல்,ஶிஷ்யனுக்கு ஜ்ஞாநோபதேஶம்பண்ணுமிடத்தில் ஸாபேக்ஷனாயிருக்கையாதல், க்ராமகுலாதிகளையிட்டு ஶ்ரீவைஷ்ணவர்களைத் தாழநினைக்கையாதல், ப்ராபகாந்தரங்களிலந்வயமாதல், ப்ராப்யாந்தரங்களில் ருசியாதல், ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் குறையாதல், ஆத்மகுணங்களில் வைகல்யமாதல், இவையாகிற பொல்லாங்கொன்றுமின்றிக்கேயிருப்பானாய்.

(ரு)"తత్సంప్రాప్త్యై ప్రభవతి తథా దేశికః-தத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததாதேசிகஃ" என்றும்,(சா)"తత్సంప్రాప్త్యై పరవరమునిర్దేశికః-தத்

---

(க) ஞானஸாரம். (உ) உபதேஶரத்தி-ங. (ங)
(ச) (ரு) வரவரமுநி-

ஸம்ப்ராப்தௌ வரவரமுநிர்தேசிகః” என்றும் சொல்லுகிறபடியே தன்னைப்போலே அங்குத்தைக்குப்புதிய ரன்றிக்கே தன்நிலமாய்க்கொண்டு தன்னையங்கே சேர்த்துவிடக் கடவனாயிருந்துள்ள ஸ்வாசார்யன் திருவுள்ளத்துக்குத் தீங்கில்லாமையாகிற ப்ராபகாந்தரங்களிலன்வயம் தொடக்கமான பொல்லாங்கில்லாமை-

தீங்கேதுமில்லாமையாகிறது - ஸ்வாசார்யன்பக்கல் ப்ரேமமற்றிருக்கை தொடக்கமான பொல்லாங்கில்லாமை. இத்தீங்கு ஒருகாலவிசேஷத்திலே யுண்டாய்க்கழிந்ததன்றிக்கே,எதந்நிவ்ருத்தி ஸ்வதஸ்ஸித்தமாய்க் காணுமிருப்பது. (தேசிகன்தன்) ஸ்வதஃ உத்தாரகத்வத்தால் வந்தப்ராதாந்யமிருக்கிறபடி.

(சிந்தைக்குப் பாங்காகநேரே பரிவுடையோர்) இப்படி மஹோபகாரகனான ஸ்வாசார்யன் திருவுள்ளத்துக்கு அநுகூலமாம்படி, (க) “దద్యాద్భక్తిత ఆదరాత్-தத்யாத்பக்தித ஆதராத்” என்றும், (உ) “ఆచార్యస్యస్థిరప్రత్యుపకరణధియాదేవవత్స్యాదుపాస్యః-ஆசார்யஸ்ய ஸ்திரப்ரத்யுபகரணதியா தேவவத்ஸ்யாதுபாஸ்யஃ” என்றும்சொல்லுகிறபடியே நேர்கொடுநேர் கிஞ்சித்காரமுகேந (ங) “தேசாரும் சிச்சனவன்சீர்வடிவை யாசையுடன் நோக்குமவன்” என்கிறபடியே தனக்கு அநுபாவ்யமான அவன் திருமேனியைப்பேணிக்கொண்டு அவன்பக்கலிலே நிரவதிகப்ரேமத்தையுடையவன்,

(பாங்காக) சிஷ்யனுக்கு நிக்ரஹகாரணம் த்யாஜ்யமென்கையாலே அவனுக்கு ஸ்வரூபம் தத்ப்ரியம் நடத்துகையொன்றும் போலேகாணும்; (நேரே) ஆளிட்டுந்தொழவொண்ணாதவோபாதியும, மஹிஷீஸேவகத்துக்கு ஆளிடவொண்ணாதவோபாதியும், தான்செய்யக்கடவ அநுகூலவ்ருத்தியை அந்யரை யிட்டுச்செய்விக்க வொண்ணாதிறே.

(பரிவுடையோர்)(ச)“యస్మాత్తదుపదేష్టాసౌ తస్మాద్గురుతరో గురుః-யஸ்மாத்ததுபதேஷ்டா ஸௌ தஸ்மாத்குருதரோகுருஃ” “అర్చనీయశ్చ వన్ద్యశ్చ కీర్తనీయశ్చ సర్వదా। ధ్యాయేజ్జపేన్నమేద్భక్త్యా భజేదభ్యర్చ

---

(க) (உ) (ங) உபதேசரத்நமாலை. (ச)

యేత్సదా। ఉపాయోపేయభావేన తమేవశరణం వ్రజేత్। ఇతిసర్వేషు వేదేషు సర్వశాస్త్రేషు సమ్మతమ్ - அர்ச்சநீயஸ்சவந்த்யஸ்ச கீர்த்தநீயஸ்சஸர்வதா। த்யாயேஜ்ஜபேந்நமேத்பக்த்யா பஜேதப்யர்ச்சயேத் ஸதா। உபாயோபேயபாவேந தமேவஸரணம் வ்ரஜேத்। இதி ஸர்வேஷு வேதேஷு ஸர்வஸாஸ்த்ரேஷு ஸம்மதம்” இத்யாதிகளாலே ஸர்வகரணங்களாலும் ஸர்வப்ரகாரங்களாலும் ஸர்வகாலமும், (க) “సర్వం యదేవ - ஸர்வம்யதேவ” என்கிறபடியே ஸ்வாசார்யன்தன்னையே எல்லாமாக ப்ரதிபத்திபண்ணி அவன்பக்கல் ப்ரேமயுக்தனாயிருக்கை யொன்றுமே ஸிஷ்யனுடைய ஜ்ஞாநபலமாகிறதென்று சொல்லாநின்றதிறே.

(பரிவுடையோர்) “ நிதியுடையோர் ” என்னுமாபோலே இதுதான் பெறுப்பேறாயிருப்பதொன்றிறே. (உ) “ తత్రాపి దుర్లభం మన్యే వైకుంఠప్రియదర్శనమ్ - தத்ராபி துர்லபம் மந்யே வைகுண்ட பிரியதர்ஸநம்” என்றதிறே (பரிவுடையோர்) மேற்சொல்லுகிற புருஷார்த்தஸித்திக்கு வேண்டுவது ஈதொன்றுமேயாய்த்து.

இங்ஙன் பரிவுடையனான விவனுக்கு ஸித்திக்கப்புகுகிற பலந்தானேதென்ன (ஓங்காரத்தேரின்மேலேறி யித்யாதி) * வைகுந்தமாநகரன்றோ இவன்கையதென்கிறார். (ஓங்காரத்தேரின்மேலேறி) இப்படி ஸ்வாசார்யவிஷயத்திலே நிரதிஸயப்ரேமஸாலியான விவன் (ங) “வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே” என்கிறபடியே இங்கிருக்கும்நாள் ஸ்வவ்யாவ்ருத்தி தோற்றவும், ஸ்வரூபாநுரூபமாகவும், பரமபதமும் கூடத்தன் சிறுமுறிக்குச் செல்லும்படியாகவும், உபயவேதாந்த காலக்ஷேபஸ்ரீயோடும், ததியாராதநஸ்ரீயோடும், உகந்தருளின நிலங்களில் மங்களாஸாஸந ஸ்ரீயோடும், தத்கைங்கர்யஸ்ரீயோடும், உடையவரைப்போலே நூற்றிருபதாண்டு குறைவுநிறைவுகளின்றிக்கேயிருந்து ஸரீராவஸாநகாலத்திலே தடுத்தும் வளைத்தும் பெறவேண்டும்படியான பரமபக்திதலையெடுத்து * அந்தமில் பேரின்பத்தடியரோடு ஒருகோவையாயிருக்க வேணுமென்னும் ப்ராப்யத்வரைவிஞ்சி, ஹார்தா(ர்தா)நுக்ருஹீதனாய்க்

(க) ஸ்தோ-ரு- (உ) பாத-கக-உ-உக. (ங) தி-வாய்-ம-ங-கக.

கொண்டு ஹ்ருதயகமலத்தினின்றும் புறப்பட்டு ஸுஷும்நை யென்னும் பேரையுடைத்தான மூர்த்த(ர்த)ந்யநாடியாலே ப்ரஹ்ம கபாலத்தைபேதித்து (க) "ఓఙ్కారరథమారుహ్య - ஓங்காரரதமாருஹ்ய" என்கிறபடியே மநஸ்ஸு ஸாரத்யம்பண்ண, ப்ரணவமாகிற தேரின்மேலேயேறி,

(செழுங்கதிரினூடுபோய்) அநந்தரம் (உ)"అర్చిషమేవాభిసమ్భవన్తి, అర్చిషోహః, అహ్న ఆపూర్యమాణపక్షమ్, ఆపూర్యమాణపక్షాత్ షడుదఙ్ఙేతి మాసాన్, మాసేభ్యస్సంవత్సరమ్, సవాయుమాగచ్ఛతి - அர்ச்சிஷமேவாபிஸம்பவந்தி; அர்ச்சிஷோஹஃ, அந்ஹ ஆபூர்யமாணபக்ஷம், ஆபூர்யமாணபக்ஷாத் ஷடுதங்மாஸாந், மாஸேப்யஸ்ஸம்வத்ஸரம், ஸவாயுமாகச்சதி" என்கிறபடியே முற்படஅர்ச்சிஸ்ஸைக்கிட்டி, பின்பு அஹஸ்ஸையும், ஶுக்லபக்ஷாபிமாநியையும், உத்தராயணாபிமாநியையும் ஸம்வத்ஸராபிமாநியையும், வாயுவையும் சென்று கிட்டி அவர்கள் பெரியப்ரீதியோடே வழிநடத்துகை முன்னாக, (௩)"సఆదిత్యమాగచ్ఛతి - ஸஆதித்யமாகச்சதி" என்றும், (௩) "ప్రవిశ్య చ సహస్రాంశుమ్ - ப்ரவிஶ்யசஸஹஸ்ராம்ஶும்" என்றும், (ச) "தேரார்நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு" என்றும் சொல்லுகிறபடியே நெருங்கியிருந்துள்ள கிரணங்களையுடையனான ஆதித்யனுடைய மண்டலத்தை பேதி(ஹ்ரஸ்வ)த்துக் கொண்டு அவன் ஸத்கரிக்க அவ்வருகேபோய்ச்சென்று,

(சேருவரே அந்தாமத்தான்) அநந்தரம்(௩)"ఆదిత్యాచ్చన్ద్రమసమ్ - చన్ద్రమసోవిద్యుతమ్, సవరుణలోకమ్, ఇన్ద్రలోకమ్, సప్రజాపతిలోకమ్, సఆగచ్ఛతి విరజాం నదీమ్, తం పఞ్చశతాన్యప్సరసాం ప్రతిధావన్తి, తం బ్రహ్మాలఙ్కారేణాలఙ్కుర్వన్తి - ஆதித்யாச்சந்த்ரமஸம், சந்த்ரமஸோ வித்யுதம், ஸவருணலோகம், ஸ இந்த்ரலோகம், ஸப்ரஜாபதிலோகம், ஸஆகச்சதிவிரஜாம்நதீம், தம்பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி, தம்ப்ரஹ்மாலங்காரேண" என்கிறபடியே அம்ருதாத்மகனான சந்த்ரனையும், ஆதிவாஹிககோடியிலே பரிகணிதனான அமாநவனையும், ஸர்வாப்யாயகனான வருணனையும், த்ரைலோக்யபாலகனான இந்த்ரனையும், முக்தராய்ப்போருமவர்களை ஸர்வப்ரகாரத்தாலும் மிகவும் ஶ்லாகிக்கக்கடவனான ப்ரஜாபதி

(க) (உ) சாந்தோ-ச-கஙி-ஓ. (௩) (ச) சிறியதிருமடல்.

யையும் சென்றுகிட்டி, அவர்கள் ஸத்கரிக்கும் ஸத்காரம் முன்னாக அவ்வோலோகங்களையும் கடந்து,

ஈஶ்வரனுக்கு க்ரீடாகந்துக ஸ்தாநீயமான அண்டத்தையும் ஒன்றுக்கொன்று பத்துமடங்கான ஆவரணஸப்தகத்தையும், * முடிவில் பெரும்பாழானமூலப்ரக்ருதியையும்கடந்து முன்பு ஸம்ஸாரியானநாளில் தான்பட்ட விழவெல்லாம்தீர மிகவும் ஸோகோத்தரமான மார்க்கத்தாலே தனக்குஉபாயமான * பாரணந்தபாதப் போதுபோலே கடுநடையிட்டுப்போய் அம்ருதவாஹிநியான விரஜையிலேகுடைந்து நீராடி, * வன்சேற்றள்ளலையும் வாஸநாரேணுவையும் விரஜாஸ்நாநத்தாலே கழியப்பெற்று,

அவ்விரஜைக்கரையிலே ஶங்கசக்ரகதாதரனாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிற அமாநவகரஸ்பர்ஶம் முன்னாக, லாவண்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணாகரமாய், ஶுத்தஸத்வமயமாய் பகவதநுபவைகபரிகரமாய், * ஒளிக்கொண்ட சோதியான விக்ரஹத்தையும் ஸ்வஸ்வரூபா விர்ப்பாவத்தையும்பெற்று, பகவதாநுகூல்யைக போக(भोग)ரான நித்யஸித்தராலே நெருங்கி, அவர்களாலும் அளவிடவொண்ணாத அளவையும் ஐஶ்வர்யத்தையும் ஸ்வபாவத்தையுமுடைத்தான திவ்யதேஶத்தைக் கண்களாரளவும் நின்றுகண்டு, கைகள்கூப்பித்தொழுது,

அமாநவபரிஸரத்தில் ஶங்ககாஹளபேரீம்ருதங்கங்களினுடைய முழக்கத்தைக்கேட்டு, ஓடுவார்விழுவார் போற்றுவார் புகழுவார் பூமழைபொழிவார் பாவாடைவிரிப்பார் பாதங்கள் கழுவுவாராய்க்கொண்டு எதிரே திரள்திரளாகப்புறப்பட்டுவருகிற நித்யமுக்தருடைய ஆநந்தகோலாஹலத்தை அநுபவித்துக்கொண்டுபோய், அவர்கள் எதிர்கொண்டு அலங்கரித்து ஸத்கரிக்கைமுன்னாக,(க) ஸ ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே ~ஸப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே" என்றும், (உ) "அந்தாமம்" என்றும், (ங) "பொன்னுலகு" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வப்ரகாரத்தாலும் ஸ்ப்ருஹணீயமாய், தன்னுடைய வரவாலே புதுக்கணித்து மிகவுமழகியதாய்க்கொண்டு ஶ்ரீவைகுண்டநாதனுக்கு போக(भोग) ஸ்தாநமாயும், அவனுடைய செங்கோலாலே ஏகாதபத்ரமாய்

---

(க) சாந்தோ- (உ) தி-வாய்-உ-தி-ந. (ங) தி-வாய்-சு-அ-௧௦.

நடத்தக்கடவதாயும் அவன் திருவடிகளிலே அபேக்ஷை ஸாபேக்ஷ வ்ருத்திகளிலும் அந்விதமாகைக்கு ஏகாந்தமாயிருந்துள்ள * ஏர்கொள் வைகுந்தமாநகரத்தைச்சென்று கிட்டி, (க) "சூழிப்பட்டோடும்சுடர்ச்சோதி வெள்ளத்தின்புறத்திருந்து" என்கிறபடியே, * அம்ருதஸாகராந்தர்நிமக்ந ஸர்வாவயவனாய்க்கொண்டு யாவத்காலமுமிருப்பன்.

(செருவரோ) இவ்வர்த்தத்தில் அசிர்ப்புப்பண்ண வேண்டுவதில்லை. இது ப்ரஸித்தமென்கிறார். (உ) "न संशयो – நஸம்ஶயோஸ்தி" என்றதிறே. (அந்தாமத்தான்) லீலாவிபூதியிலுங்காட்டில் நித்யவிபூதிக்குண்டான ப்ராதாந்யமிருக்கிறபடி.

ஆக, இப்பாட்டாலே, சரமப்ரகரணத்தில் "ஆசார்யஸம்பந்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும்" இத்யாதிகளாற் சொல்லுகிற அர்த்தவிசேஷங்களை ப்ரதிபாதித்தருளினாராய்த்து. (எ)

நிகமம்;—ஆக இப்ப்ரபந்தத்தால் - அர்த்தபஞ்சகோபதேஷ்டாவே ஆசார்யனாகிறானென்னுமிடத்தையும். அவனிடத்திலே ப்ரேமமற்றிருப்பார் ஸ்வாத்மகா(ஸா)தகரென்னுமிடத்தையும், அவர்கள் ஜ்ஞானவிசேஷயுக்தரேயாகிலும் நித்யஸம்ஸாரிகளாய்ப்போருவரென்னுமிடத்தையும், அதுக்கு க்ருதக்ந(ஷ்டு)ரான இவர்கள் அதிக்ரூரரென்னுமிடத்தையும், ஸ்வோத்கர்ஷத்தைத் தேடுகை ஆசார்யனுக்கு அழுக்கென்னுமிடத்தையும், இவ்வழுக்குக்கடியான தோஷத்தைப் பெரியபெருமாள்தாமே தமக்குப் போக்கியருள வேணுமென்னுமிடத்தையும், ஆசார்யன்பக்கல் ப்ரேமயுக்தனானவன் அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலேசென்று முக்தைஸ்வர்யத்தைப்பெற்றுக் கைங்கர்யஸாம்ராஜ்யத்திலே மூர்த்தாபிஷிக்தனாய்க்கொண்டு யாவதாத்மபா(பா)வியாக விருப்பனென்னுமிடத்தையும் அருளிச்செய்து நின்றாராய்த்து. *

விளாஞ்சோலைப்பிள்ளை யருளிச்செய்த ஸப்தகாதைக்கு
பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த வ்யாக்யாநம்

முற்றிற்று.

விளாஞ்சோலைப்பிள்ளை திருவடிகளேசரணம்.

(க) தி-வாய்-அ-கட-௩. (உ)



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ஸப்தகாதை பதவுரை.

—————:o:—————

## ௧-பாட்டு - அம்பொன்.

| | |
|---|---|
| அம் | அழகியதாய் |
| பொன் | பாவநமான |
| அரங்கர்க்கும் | திருவரங்கத்தைக் கோயிலாகவுடைய பெரிய பெருமாளுக்கும், |
| ஆவிக்கும் | பத்தமுக்த நித்யரூபேண மூன்று வகைப்பட்ட ஆத்மவஸ்துவுக்கு முண்டான |
| அந்தரங்கசம்பந்தம் | அநந்யார்ஹசேஷத்வமாகிற நெருங்கிய ஸம்பந்தத்தையும் |
| காட்டி | வெளியிட்டுக்கொடுத்து, |
| தடைகாட்டி | ப்ராப்யத்வ ப்ராபகத்வ பரத்வ அநந்யார்ஹ சேஷத்வாதிப்ரதிபத்திகளுக்கு விரோதியா யுள்ளவைகளையும் வெளியிட்டுக்கொடுத்து, |
| உம்பர்திவமென்னும் | நித்யஸூரிகளுக்கு இஷ்டவிநியோகார்ஹமான பரமபதத்தில் நித்யகைங்கர்யம் செய்கையாகிற |
| வாழ்வுக்கு | வாழ்ச்சிக்கு |
| சேர்ந்த | ஸத்ருசமா யிருந்துள்ள |
| நெறி | உபாயமான ப்ரபத்தியையும் |
| காட்டுமவனன்றோ | திருமந்த்ரோபதேச முகேந வெளியிட்டுக்கொடுக்குமவனன்றோ |
| ஆசாரியன் | ஸதாசார்யனாகிறான். (௧) |

## ௨-ம் பாட்டு, அஞ்சுபொருள்.

அஞ்சுபொருளும் — ஸ்வஸ்வரூப பரஸ்வரூப புருஷார்த்தஸ்வரூப உபாயஸ்வரூப விரோதிஸ்வரூபங்களாகிற அர்த்த பஞ்சகத்தையும்

அளித்தவன் பால் பரமக்ருபையாலே உபதேசித்தருளின ஆசார்யன் பக்கல்

| | |
|---|---|
| அன்பிலார் | ப்ரேமமில்லாதிருக்குமவர்கள் |
| நஞ்சில் | விஷத்திலும் காட்டில் |
| மிகக்கொடியர் | மிகவும் க்ரூராயிருப்பர்கள்; |

(இவ்வர்த்தத்தை எல்லாருமறியும்படி)

| | |
|---|---|
| நாம் | பிள்ளைலோகாசார்யரருளிச்செய்தவர்த்தத்தில் நிஷ்டரான நாம் |
| சொன்னோம் | பரமார்த்தமாகச்சொன்னோம், (எங்ஙனே யென்னில்) |
| நஞ்சுதான் | "விஷமானது (ஸ்பர்ஶமாத்ரத்தாலே) |
| ஊனை | மாம்ஸப்ரசுரமாய் அநித்யமான ஶரீரத்தை |
| முடிக்கும் | நஶிப்பிக்கும்; |
| அது | ஆசார்யவிஷயப்ரேமமில்லாத அஸத்ப்ராயனானவன் |
| உயிரை | ஜ்ஞாநாநந்தமயமாய் நித்யமான ஆத்மவஸ்துவை |
| முடிக்கும் | நஶிப்பிக்குமவன்." |
| என்று இவை | என்கிற இவ்வர்த்தத்தை |
| ஈன்மிலார் | ஸ்வாசார்ய விஷயப்ரேமமில்லாமை யாகிறதாழ்வில்லாத நம்பூர்வாசார்யர்கள் |
| சொன்னார் | சொன்னார்கள். (உ) |

## ௩-ம் பாட்டு, பார்த்த.

| | |
|---|---|
| பார்த்த | ஜ்ஞாநோபதேசமுகத்தாலே கடாக்ஷித்தருளின |
| குருவினளவில் | ஆசார்யன் பக்கல் |
| பரிவின்றி | ப்ரேமமில்லாமல், (இருக்குமவன்) |
| சீர்த்த | ஶ்ரிய:பதியையுள்ளபடி அறிவிக்கவற்றாகையாலே கனத்திருப்பதாய் |
| மிகு | ஶ்லாக்யமாயிருந்துள்ள |
| ஞானமெல்லாம் | எல்லாஜ்ஞாநங்களும் |
| சேர்ந்தாலும் | தன்னிடத்தில் குறைவின்றியிருந்தபோதிலும், |

| | |
|---|---|
| கார்த்தகடல் | கார்போலே கறுத்துத்தோற்றுகிற கடலாலே சூழப்பட்ட |
| மண்ணின்மேல் | இந்தபூமியிலேதானே |
| துன்புற்று | அஸங்க்யாதங்களானதுஃக்கங்களை அநுபவித்து |
| மங்கும் | நசித்துவிடுவன்; (நசித்தபிறகும்). |
| கிழாம் | து:க்கமே யாத்ரையாயிருக்கையாலே மிகவும் தண்ணிதான |
| நரகு | நரகத்தை |
| தேங்காமல் | இடைவிடாமல் |
| நண்ணும் | கிட்டி துஃக்காநுபவம் பண்ணியிருப்பன்; (௬) |

## ௭-ம் பாட்டு, தன்னை.

| | |
|---|---|
| ஒரு | வாசகங்களில் தனக்கவ்வருகில்லாதபடி அத்வி தீயமான |
| மந்திரத்தின் | பெரிய திருமந்த்ரத்தில் |
| தன்னை | மகாரத்தால் பகவச்சேஷத்வாஶ்ரயமாக ப்ரதி பாதிக்கப்பட்டதானும், |
| இறையை | அகாரத்தால் தனக்குவகுத்த ஶேஷியாகச்சொ ல்லப்பட்ட எம்பெருமானும், |
| தடையை | ஷஷ்ட்யந்தமகாரத்தால் சொல்லப்பட்ட விரோ திவர்க்கமும், |
| சரணெறியை | ஸகண்டநம:பதத்தால் நிரபாயோபாயமாகச் சொல்லப்பட்ட ஶரணாகதியும் |
| மன்னு | யாவதாத்மபாவியான |
| பெருவாழ்வை | ஸவிபக்திக நாராயணபதத்தாலே சொல்லப்ப ட்ட கைங்கர்யமாகிற மஹாபுருஷார்த்தமும், |
| அஞ்சினும் | ஆகிய இவ்வர்த்தபஞ்சக ஸ்வரூபத்திலும் |
| கேடு | பொல்லாங்கான அஜ்ஞாந ஸம்ஶய விபர்யயங்க ளானவை |
| ஓட | வாஸநையோடே போம்படி |
| இன்னருளால் | இத்தலையிலொன்று மபேக்ஷியாத பரமக்ருபை யாலே |

| | |
|---|---|
| அளித்தவன்பால் | ஜ்ஞாநோபதேசம்பண்ணியருளின ஆசார்யன் பக்கல் |
| அன்பிலார் | ப்ரேமமில்லாதவர்களை |
| நஞ்சிலும் | விஷத்திலுங்காட்டில் |
| கேடு என்று | அதிக்ரூரரென்று |
| நான் | பிள்ளைலோகாசார்யருடைய விஷயீகாரத்தைப் பெற்ற நான் |
| இருப்பன் | ப்ரதிபத்தி பண்ணியிருப்பன். (௪) |

## ௫-ம் பாட்டு, என்பக்கல்.

| | |
|---|---|
| என்பக்கல் | என்னிடத்தில் |
| இன்னார் | "இன்னாரின்னார் |
| ஓதினார் | அர்த்தவிசேஷங்களை அதிகரித்தார்க ளாகையாலே ஶிஷ்யர்கள்" |
| எனும் | என்கிற |
| இயல்வும் | துஸ்ஸ்வபாவமும், |
| என்பக்கல் | என்னிடத்தில் |
| நன்மை | "ஆசார்யத்வமாகிற நன்மையிரா நின்றது" |
| எனுமியல்வும் | என்கிற துஸ்ஸ்வபாவமும், |
| மன்பக்கல் | ஸர்வஸ்வாமியான எம்பெருமான்பக்கலிலே |
| சேவிப்பார்க்கு | ஸ்நேஹபூர்வமாக நித்யஸேவை பண்ணுமவர்களுக்கு |
| அன்புடையோர் | பரமஸ்நேஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்களிடத்தில் |
| சன்மநிரூபணமும் | ஜாதிநிரூபணம் பண்ணுகையும், (ஆகிய இம்மூன்றும்) |
| ஆவிக்கு | ஜ்ஞாநாநந்தமயமான ஆத்மவஸ்துவுக்கு |
| நேரே | ஒருத்வாரமின்றியே நேர்கொடுநேர் |
| அழுக்கு | ஸ்வரூபத்தை நஶிப்பிக்குமதாயிருக்கும். (௫) |

## ௬-ம் பாட்டு, அழுக்கென்று.

| | |
|---|---|
| அம் | அழகியதாயும் |
| பொன் | ஸ்ப்ருஹணீயமுமான |

| | |
|---|---|
| அரங்கா | திருவரங்கப்பெருநகரிலே நித்யவாஸம் பண்ணு மவனே |
| இவை | கீழ்ச்சொன்னவை யடங்கலும் |

( ஆ த் ம வ ஸ் து வு க் கு )

| | |
|---|---|
| அழுக்கென்று | அவத்யகரமென்பதை |
| அறிந்தேன் | விசதமாகவறிந்தேன், (ஆகையாலே) |
| பழிப்பிலா | கீழ்ச்சொன்ன குற்றங்க ளொன்றுமில்லாதவ ராய் |
| என் ஆரியர்க்காக | அறிவிலனான வெனக்கு ஜ்ஞாநோபதேசம் ப ண்ணியருளின பிள்ளை லோகாசார்யருக்கா கவும் |
| எம்பெருமானார்க் காக | அவர்க்குப் பரமசேஷியான எம்பெருமானார்க் காகவும் |
| உன் | தேவரீருடைய |
| ஆர் அருட்காக | கரைபுரண்டிருக்கிற க்ருபாகுணத்துக்காகவும் |
| உற்று | (அடியேனை) அங்கீகரித்தருளி, |
| உள்ளில் | ஜ்ஞாநப்ரஸரணத்வாரமான மநஸ்ஸைப்பற்றிக் கிடக்கிற |
| வினையை | பாபஸமூஹத்தை |
| ஒழித்தருளாய் | வாஸநையோடே போக்கியருளவேணும். (௬) |

## எ-ம் பாட்டு, தீங்கேதுமில்லா.

| | |
|---|---|
| தீங்கு ஏதுமில்லா | தன் ஆசார்யன்பக்கல் ப்ரேமமற்றிருக்கை மூல மான பொல்லாங்கொன்று மின்றிக்கேயிருக் கிற |
| தேசிகன்தன் | ஸ்வாசார்யனுடைய |
| சிந்தைக்கு | திருவுள்ளத்துக்கு |
| பாங்காக | அநுகூலமாம்படி |
| நேரே | நேர்கொடுநேர் (நிஞ்சித்கரித்துக்கொண்டு) |
| பரிவுடையோர் | அவன்பக்கல் ப்ரேமமுடையவர்கள், |
| ஓங்காரம் | ப்ரணவமாகிற |
| தேரின்மேல் | ரதத்தில் |

| | |
|---|---|
| வறி | வறிக்கொண்டு |
| செழுங்கதிரினூடு | ஸௌர்யமண்டல மத்யமார்க்கமாக, |
| போய் | அர்ச்சிராதிகதியாலே போய் |
| அந்தாமம் | அழகியதான ஸ்ரீவைகுண்டத்தை |
| சேருவர் | கிட்டி நித்யகைங்கர்யம் பண்ணப்பெறுவர். (எ) |

ஸப்தகாதை பதவுரை

முற்றிற்று.

## ஸப்தகாதை சுத்தாசுத்தம்.

| பக்கம் | வரி | அசுத்தம் | சுத்தம் |
|---|---|---|---|
| உ | ௩௦ | முகமாகவும் | முக்யமாகவும் |
| ௩ | ௧௨ | மொழியும் | மௌளியும் |
| ௬ | ௧௧ | ப்ரதிபாதிக்கிறது | ப்ரதிபாதிக்கும் இது |
| ,, | ௨௪ | அடையே உட்கொண்டு | அடைட்வே உட்கொண்டு நடக்கையாலே காயத்ர் யக்ஷாங்களை உட்கொண்டு |
| ௧௧ | ௨௯ | సర్వ్యంహిప్రాణినాంప్రతమ్ | సర్వ్యంహిప్రాణీనామృతమ్ |
| ௧௩ | ௧௩ | ஸ்வவிரோத்யதைஅஸஹ | ஸ்வவிரோத்யுதய ஸஹமாகையாலே |
| ௧௬ | ௨௧ | விசேஷைக்யத்தாலே | விஶிஷ்டைக்யத்தாலே |
| ௧௮ | ௯ | அரக்ஷ்ய | அரக்ஷக |
| ௨௧ | ௬ | விஹிதமாய்த்தல்ல | விஹிதமாய், శ్లాఘ్యోద |
| ௨௬ | ௨௦ | ஓருக்திகளாலே | பரோக்திகளாலே |
| ௨௭ | ௧௯ | மீளும்படியான | மீளும்படி கடுந்தரையான |
| ௨௯ | ௨௧ | பயம் | அசிர்ப்பு |
| ௩௧ | ௫ | பின்னையும்இவையோடே | பின்னையும் விளையாடி |

முற்றிற்று.